# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில், திருமலை

## தினசரி பூஜைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

**சனி, ஞாயிறு, திங்கள் மற்றும் செவ்வாய்க் கிழமைகளில்:**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன
3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலுக்குள் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை,(தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் மதியம் 12-00 வரை : **ஸர்வதரிசனம்**
மதியம் : 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, 2வது அர்ச்சனை, ஏகாந்தம், 2வது மணி.
1-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**
1-00 முதல் 7-00 வரை: சர்க்கார் மற்றும் ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜித பிரம்மோற் சவங்கள், வாகனசேவைகள், ஊஞ்சல்சேவை முதலியன (சர்க்கார் மற்றும் ஆர்ஜித தெப் போற்சவங்கள் செவ்வாய்க்கிழமைகளில் மட்டுமே,
இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், (ஏகாந்தம்) இரவு மணி
8-00 முதல் 12-00 (நடு இரவு) **ஸர்வதரிசனம்**
12-00 முதல் 12-30 வரை : சுத்தி,ஏகாந்த சேவைக் கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்த சேவை (தனி)

**புதன் கிழமைகளில் (ஸகஸ்ர கலஸாபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன.
3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை, (தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலஸாபி ஷேகத்திற்கான ஏற்பாடுகள்.
6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) 2வது மணி.
8-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்.**
மதியம் : 1-00 முதல் மாலை 6-00 வரை: சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன
இரவு : 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன
8-00 முதல் நடுஇரவு 12-00 வரை **ஸர்வதரிசனம்.**
12-00 முதல் 12-30 வரை : சுத்தி,ஏகாந்தசேவைக் கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)

**வியாழக் கிழமைகளில் (ஆர்ஜித திருப்பாவாடை, பூலங்கி சேவை ஆகியவை நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன
3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை (ஸகஸ்ரநாம அர்ச்சனை (தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் 8-00 வரை : சாலிம்பு, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடை அலங்காரம், மணி முதலியன.
8-00 முதல் மாலை 6-00 வரை : **ஸர்வதரிசனம்**
மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை : சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவம், ஆர்ஜித பிரம் மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன.
மாலை 6-00 முதல் இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், பூலங்கி சமர்ப்பணை, இரவுமணி முதலியன.
இரவு 8-00 முதல் 12-00 வரை : **பூலங்கி ஸர்வதரிசனம்**
12-00 முதல் 12-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக் கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)

**வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)
3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, நித்ய கட்டளை கைங்கர்யங்கள், காலை முதல் மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.
5-00 முதல் 7-00 வரை : அபிஷேகம் (தனி)
7-00 முதல் 8-30 வரை : சமர்ப்பணை முதலியன
8-30 முதல் 9-30 வரை : தோமால சேவை அர்ச்சனை (தனி)
9-30 முதல் 10-00 வரை : 2வது மணி, பலி, சாத்துமுறை முதலியன
10-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**
மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை : சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவம், ஆர்ஜித பிரம் மோற்சவங்கள், வாகனசேவைகள், சர்க்கார் மற்றும் ஆர்ஜித ஊஞ்சல் சேவை முதலியன,
இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள் இரவு மணி முதலியன.
8-00 முதல் இரவு 12-00 வரை **ஸர்வதரிசனம்**
12-00 முதல் 12-30 வரை : சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)



नमोऽस्तु ते व्यास विशालबुद्धे फुल्लारविन्दायतपत्रनेत्र ।
येन त्वया भारततैलपूर्णः प्रज्वालितो ज्ञानमयः प्रदीपः ॥

*நமோஸ்து தே வ்யாஸ விசாலபுத்தே புல்லாரவிந்தாய தபத்ரநேத்ர ।*
*யேன த்வயா பாரததைலபூர்ண ஃ ப்ரஜ்வாலிதோ ஞானமய ஃ ப்ரதீப ஃ ॥*

**விசால புத்தியுடையவரும், நன்கு அலர்ந்த தாமரையிதழ் போன்ற கண்களையுடையவரும் ஆகிய வியாசரே, மகாபாரதம் என்னும் எண்ணெய் நிறைந்த ஞான தீபத்தை ஏற்றி வைத்த உமக்கு நமஸ்காரம்.**

***ஸ்ரீமத் பகவத்கீதை - தியான ஶ்லோகம்.***



# ஸப்தகிரி


ஜுலை 1981

மலர் 12
இதழ் 2

தனிப்பிரதி 50 காசு

வருடச் சந்தா ரூ. 6



*சிறப்பாசிரியர் :*

திரு. பி. வி. ஆர். கே. பிரசாத், I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*ஆசிரியர் :*

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

*அச்சிடுபவர் :*

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு:

EDITOR
'Sapthagiri'
Alipiri Road,
TIRUPATI.


## உள்ளுறை



*தவிர்க்க முடியா காரணங்கள் முன்னிட்டு இந்திய மருத்துவம் எனும் தொடர் கட்டுரை இவ் இதழில் வெளியிட முடியவில்லை.*



# செய்திச் சுருக்கம்



## ஜெயந்தி விழா

ஸ்ரீ அன்னமாச்சார்யாவின் 573-வது ஜெயந்தி விழா திருப்பதியில் ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் 18-5-81 முதல் 25-5-81 வரை வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. 18-5-81 அன்று தொடங்கிய இவ்விழாவிற்குத் தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர்.கே. பிரஸாத் அவர்கள் தலைமை வகிக்க, விழாவினை திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக் கழகத் துணைவேந்தர். டாக்டர். எம். வி. ராம சர்மா அவர்கள் துவக்கி வைத்தார். பிரபல தெலுங்கு எழுத்தாளர் திருமதி. கே. ராமலக்ஷ்மி ஆருத்ரா அவர்கள் சிறப்பு விருந்தினராக விழாவில் பங்கேற்றார். விழாவைத் துவக்கி வைத்து உரையாற்றிய துணை வேந்தரவர்கள், ஸ்ரீ அன்னமாச்சார்யா மற்றும் ஸ்ரீ தியாகராஜருக்கும் உள்ள இலக்கிய ஒற்றுமைகளை வெளிக் கொணரும் வகையில் ஆராய்ச்சிகளை மேற்கொள்ளல் அவசியம் என்று குறிப்பிட்டு, தெலுங்கில் 'பேச்சு வழக்கு' கவிதை இலக்கியத்திற்கு முதன்முதலாக வழி காட்டியவர் ஸ்ரீ அன்னமாச்சார்யா அவர்கள் என்று கூறினார். பின்னர் செயலாட்சித் தலைவர் அவர்கள் தம் தலைமையுரையில், ஸ்ரீ அன்னமாச்சார்யா அவர்களின் கீர்த்தனைகளின் பெருமையைப் பரப்பும் வகையில் அவருடைய கீர்த்தனைகள், தி.தி.தே. இசைக்கலைஞர்கள் துணையால் பாடப் பெற்று அவை 'கேஸட்டு'களின் மூலம் வெளிக் கொணரப்படும் என்றும், நாட்டில் உள்ள, சென்னைப் பல்கலைக் கழகம் உள்ளிட்டு ஆறு பல்கலைக்கழகங்களில் ஸ்ரீ அன்னமாச்சார்யா இலக்கிய ஆராய்ச்சித் திட்டங்கள் மேற்கொள்ளப்படும் என்றும் கூறினார்.

அடுத்த இரண்டு நாட்களின்போது நடைபெற்ற ஸ்ரீ அன்னமாச்சார்யா கீர்த்தனைகளில் பொதிந்துள்ள இலக்கியச் சுவை பற்றிய கருத்தரங்கில், திருவாளர்கள் ஆந்திர அரசு ஆஸ்தான வித்துவான் தாஸரதி, ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக் கழகத்தைச் சார்ந்த பேராசிரியர் ஜி. என். ரெட்டி, டாக்டர். கே. ஸர்வோத்தமன், எஸ். பி. ரகுநாதாச்சார்யா, மதுரை காமராஜ் பல்கலைக் கழகத்தைச்சார்ந்த (அண்மையில் மறைந்த) டி. கோதண்டராமய்யா, ஆந்திரா பல்கலைக் கழகத்தைச் சார்ந்த டாக்டர். எஸ். வி. ஜோகா ராவ், உஸ்மானியா பல்கலைக் கழகத்தைச் சார்ந்த பி. ராமராஜு ஆகியோர் பங்கேற்றனர். கருத்தரங்கிற்குப் பின்னர் மேற்குறிப்பிட்டவர்கள் தி. தி. தேவஸ்தானத்தாரால் கௌரவிக்கப்பட்டனர். இவ்விழாவில், ஹைதராபாத்தைச் சார்ந்த குமாரி. ஆலேக்யா, குமாரி. ராதா பிரஸாத் ராவ் ஆகியோரின் பரத நாட்டிய நிகழ்ச்சிகள் நடைபெற்றன. விழா இறுதி நாளன்று, இவ்வாண்டு ஜெயந்தி விழா ஒட்டி நடைபெற்ற ஸ்ரீஅன்னமாச்சார்யா இசைப் போட்டியில் வெற்றி பெற்ற நபர்களுக்கு தி. தி. தேவஸ்தானத்தின் சார்பில் திரு. தாஸரதி அவர்கள் நற்சான்றிதழ்கள் வழங்கினார்.

## திருமலையில் முதலமைச்சர்

3-6-81 அன்று காலை திருப்பதிக்கு ஆந்திர மாநில முதலமைச்சர் திரு. டி. அஞ்சய்யா அவர்கள் வருகை புரிந்தார். திருப்பதியிலும் திருமலையிலும் நகரமக்கள் முதல்வர் அவர்களை வழி நெடுகிலும் ஆரவாரமாக வரவேற்றனர். பின்னர் காலை 11 மணி அளவில் திருமலைக்குச் சென்றார். அங்கு கோயிலின் முன்பு தி.தி. தே. உயர் அலுவலர்களால் அமைச்சரவர்கள் கோயில் மரியாதையுடன் எதிர் கொள்ளப்பட்டார். தொடர்ந்து கோயிலுக்குச் சென்று ஸ்ரீவேங்கடேஸ்வரரைத் தரிசித்தார். பின்னர் தன் குடும்பத்தாருடன் அமைச்சரவர்கள் திருமலைக் கோயிலில் ஸகஸ்ர கலாஸாபிஷேகத்திலும் கல்யாணோற்சவத்திலும்பங்கேற்றார்.

## சொற்பொழிவு

திருப்பதியில் ஸ்ரீ வேங்கடேஸ்வரா கீழ்த்திசைக் கல்லூரி மைதானத்தில் 20-5-81 முதல் 29-5-81 வரை 10 நாட்களுக்கு ஸ்ரீமத் பாகவதம் சம்பந்தப்பட்ட தொடர் சொற்பொழிவுகளை தி. தி. தேவஸ்தானத்தின் ஆதரவில் கடப்பை மாவட்டம் பூமானந்தாஷ்ரமத்தின் ஸ்ரீ சுவாமி ராம கிருஷ்ணானந்தாஜி அவர்கள் வழங்கினார்.

## ஊஞ்சல் சேவை

திருமலையில் நடைபெறும் ஊஞ்சல் சேவைக்கான ஆர்ஜிதக் கட்டணம் ரூ. 1000-ஆக தி. தி. தே. மேலாண்மைக் குழு நிர்ணயித்துள்ளது. இது போது ஸ்ரீ வேங்கடேஸ்வரர் திரு உருவம் பொறித்த தங்கப் பதக்கம் வேண்டுவோர் தனியாக அதற்குரிய கட்டணம் செலுத்தி பெற்றுக் கொள்ளலாம்.

## கீழ்த்திசை மாநாடு

மூன்றாவது ஆந்திர மாநில கீழ்த்திசை மாநாடு திருப்பதியில் 13-6-81 முதல் 15-6-81 வரை மூன்று நாட்களுக்கு நடைபெற்றது. இம்மாநாட்டிற்கு 190 பிரதிநிதிகள் பங்கேற்றனர். முதலிரண்டு மாநாடுகள் ஹைதராபாத்திலும், வால்டேரிலும் முறையே நடைபெற்றன. தி. தி. தேவஸ்தானத்தின் உதவியுடன் இம்மூன்றும் மாநாட்டில் பங்கேற்கும் பிரதி நிதிகளுக்கு தங்குமிடமும், உணவு வசதியும் மேற்கொள்ளப்பட்டன.

## நித்ய குங்கும அர்ச்சனை

திருச்சானூர் ஸ்ரீ பத்மாவதி அம்மையார் கோயிலில் நடைபெறும் நித்ய குங்கும அர்ச்சனைக்காக கிருஹஸ்தரிடமிருந்து ஆண்டொன்றுக்கு வசூலிக்கப்படும் கட்டணம் ரூ. 42/- லிருந்து ரூ. 150/- ஆக உயர்த்தப்பட்டுள்ளது.

### உதயாஸ்தமான ஸர்வ சேவா திட்டம்

திருமலைக் கோயிலின் காலையில் கதவுகள் திறந்தது முதல் இரவு மூடும் வரை ஒரு நாள் முழுவதும் கோயிலில் நடைபெறும், ஆர்ஜித சேவைகளான கல்யாணோற்சவம், ஊஞ்சல் சேவை, பிரம்மோற்சவம், கோயிலாழ்வார் திருமஞ்சனம், ஸகஸ்ர கலசாபிஷேகம், திருப்பாவாடை, வாகன சேவைகள் போன்றவற்றைத் தவிர்த்து மற்றைய சமயச் சடங்குகளான சுப்ரபாதம், தோமாலா, அர்ச்சனை, (மூன்று வேளைக்கு) நைவேத்தியங்கள் மற்றும் சிறப்பு சேவைகள் போன்றவற்றிற்காகும் செலவுகளை ஏற்கும்படியான ஒரு அறக்கொடைத் திட்டத்தில் பக்தர்கள் பங்கேற்கும் வகையில் தி.தி.தேவஸ்தானம் ஒரு முயற்சியை மேற்கொண்டுள்ளது. இத்திட்டத்தின் முக்கிய தனிச் சிறப்புக்கள் பின் வருமாறு:

அறக்கொடையாளர் ரூபாய் ஒரு இலட்சத்திற்கு 'எக்ஸிக்யூட்டிவ் ஆபிஸர்', திருமலை திருப்பதி தேவஸ்தானம் எனும் பெயரில் டிமாண்ட் டிராப்ட் ஒன்றினை நாட்டில் உள்ள எந்த வங்கி மூலமாவது வாங்கி அனுப்புதல் வேண்டும். வெள்ளிக் கிழமைகள் தவிர வாரத்தின் மற்றைய நாட்களுக்கு இவ் அறக்கொடை மேற்கொள்ளப்படும். வெள்ளிக் கிழமைகளில் நடைபெற வேண்டுமானால், அன்று இறைவனுக்கு நடைபெறும் அபிஷேகத்திற்கான செலவுகளையும் ஏற்கும் விதத்தில் அறக் கொடையாளர் ரூ. 3 இலட்சம் செலுத்துதல் வேண்டும். அறக் கொடையாளர், குறிப்பிட்ட அந் நாளின்போது, நடைபெறும் எல்லா சேவைகளுக்கும், அவரைச் சார்ந்த 6 (ஆறு) நபர்கள் அனுமதிக்கப் படுவர். அதாவது வெள்ளிக் கிழமைகளில் தவிர, வாரத்தின் மற்றைய நாட்களின்போது சுப்ரபாதம், தோமால சேவை, ஸகஸ்ரநாம அர்ச்சனை, ஏகாந்த சேவை ஆகியவற்றிற்கு, (அன்று எந்த ஒரு காரணத்தைக் கொண்டும் மேற்குறிப்பிட்ட சேவைகளில் சில நடக்கப்படாமலிருக்கலாம்.) அனுமதிக்கப்படுவர். கோயிலினுள் ஒரு பலகையில் அறக் கொடையாளரின் பெயர் அன்று எழுதப்படும். அன்று காலை ஆஸ்தானத்தின் போது அறக் கொடையாளரின் பெயர், கோத்ரம் வாசிக்கப்படும். மேலும் அறக் கொடையாளர் மற்றும் அவரைச் சார்ந்தவர்கள் (6 பேர்) அன்று நடைபெறும் ஆர்ஜித சேவைகளை கண்டு களிக்கலாம். அறக்கொடையாளர்க்கு அன்று கல்யாணுற்சவத்தின் போது உற்சவமூர்த்திக்கு அணிவிக்கப்பட்ட மூன்று சேஷவஸ்தரங்களில் ஒன்று வழங்கப்படும். 25 லட்டுகள் மற்றும் வடைகள் வழங்கப்படும்.

ஒரு வேளை, பொருட்களின் விலை ஒரு குறிப்பிட்ட வரையறையைத் தாண்டி அதிகமாக உயர்ந்து விட்டால், அதிகப்படியான அத்தொகையினை அறக்கொடையாக வழங்குதல் வேண்டும் அல்லது தி. தி. தே. மேலாண்மை அன்றைக்கு மற்றொரு அறக்கொடையினை ஏற்றுக்கொள்ள அனுமதிக்க வேண்டும். இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட கிருஹஸ்தர்களின் பெயரில் சேவைகள் நடத்தப்படும். அறக்கொடையினை செயற்படுத்தப்படும் நாளினை தி. தி. தேவஸ்தானம் பொதுவாக 30 நாட்களுக்கு முன் கூட்டியே கிருஹஸ்தர்க்கு அறிவிக்கும்.

மற்றைய விவரங்களுக்கு, செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளுதல் வேண்டும்.

## வருந்துகிறோம்



'அண்மையில் தி. தி. தேவஸ்தானத்தின் ஆஸ்தான வித்வானாக நியமிக்கப்பட்டதை ஒட்டி திரு. மணி ஐயரவர்கள் கௌரவிக்கப்பட்டபோது.

புகழ்பெற்ற மிருதங்க வித்வானாக கர்னாடக இசை உலகத்தில் சுமார் 40 ஆண்டுகளாக கொடி கட்டிப் பறந்த திரு. பாலக்காடு மணி ஐயர் தனது 70-வது வயதில் கொச்சியில் 29-5-81 அன்று மரணமடைந்தார் என்பதைக் கேட்டு ஸப்தகிரி மிகவும் அதிர்ச்சி அடைந்தது. ஏனெனின் இரண்டு மாதங்களுக்கு முன்பு தான், திருப்பதியில் தி. தி. தேவஸ்தானம் திரு. மணி ஐயரவர்களை தனது ஆஸ்தான வித்வானாக நியமித்து தன்னைப் பெருமைப்படுத்திக் கொண்டது. திரு. மணி ஐயரவர்கள் 1956-இல் ஜனாதிபதி பரிசு பெற்றதும், 1965-இல் எடின்பரோ இசை நிகழ்ச்சியில் பங்கேற்றதும், 1971-இல் பத்மபூஷண் பட்டம் பெற்றதும், அதனைத் தொடர்ந்து பல அயல்நாடுகளில் பல இன்னிசை நிகழ்ச்சிகளை புரிந்து மக்களைப் பரவசப்படுத்தியதும் நாடறிந்ததே. 1971-இல் சென்னை மியூசிக் அகாடமி 'சங்கீத கலாநிதி', விருது அளித்தும், தமிழ் இசைச் சங்கம்' இசைப் பேரறிஞர்' என்ற பட்டத்தினை அளித்தும் ஐயரவர்களை கௌரவித்தன. இத்தகு பெருமைமிகு ஐயரவர்களை இழந்து தவிக்கும் அன்னாரின் குடும்பத்திற்கும், அவருடைய ரசிகர்களுக்கும், 'ஸப்தகிரி' தன் வாசகர்கள் சார்பிலும், மேலாண்மையின் சார்பிலும் தன் ஆழ்ந்த அனுதாபங்களை தெரிவித்துக் கொள்கின்றது. (ஆ-ர்.)

வ்யாஸாய விஷ்ணுரூபாய
வ்யாஸரூபாய விஷ்ணவே |
நமோ வை ப்ரஹ்ம நிதயே
வாஸிஷ்டாய நமோ நமஹ ||

[விஷ்ணு உருவமான வியாசருக்கு, வியாஸ ரூபமான விஷ்ணுவிற்கு வணக்கம்; பிரம்ம நிதியான வசிஷ்ட குலத்தோன்றலுக்கு வணக்கம், வணக்கம்.]

## குரு பூர்ணிமை

சந்திரனின் இயக்கத்தை வைத்துக் கணக்கிடப்படும் காலக்கணக்கு சாந்திரமான முறையாகும். அதன்படி, ஆண்டின் ஆஷாட மாதத்துப் பௌர்ணமி ஒரு புனித நாள். வியாஸ பூர்ணிமை என்றும், குரு பூர்ணிமை என்றும் அழைக்கப்படும் அந்நாள் படிப்பையோ, மந்திரத்தையோ, ஞான மார்க்கத்தையோ கற்பித்த




குருவிற்கு வணக்கமும் நன்றியும் செலுத்தும் நன்னாள். துறவிகளுக்கு இது ஒரு முக்கியமான தினமாகும்.

## சாதுர் மாஸ்ய விரதம்

பொதுவாக, சந்நியாசிகள் ஓரிடத்தில் ஓர் இரவு அல்லது அதிகமாகப் போனால் மூன்று நாட்கள் தங்கலாம் என்பது துறவிகளுக்கேற்பட்ட நியதி. எங்கும், எதிலும், எவரிடத்திலும் தனிப்பட்ட பற்று அல்லது பிணைப்பு ஏற்படாமலிருப்பதற்கும், அவர்களுடன் பழக நேரிடும் மாந்தர்களின் மாசுகளினால் பாதிக்கப்படாமலிருப்பதற்காகவுமே இது ஏற்படுத்தப்பட்டுள்ளது. ஆனால், எப்போதுமே சஞ்சாரம் செய்து கொண்டிருந்தால், ஆத்ம தத்துவ விசாரம் செய்வதும் பரம்பொருள் பற்றித் தெரிந்து கொண்டதைப் பகிர்ந்து கொள்வதும் எவ்வாறு? தவிரவும், மழைக் காலத்தில் மரவட்டை, நத்தை போன்ற சிறு பிராணிகள் வெளி வந்து நடமாடும் அல்லவா? அப்போது அவர்கள் நடந்து செல்லுகையில் கூட அவற்றுக்குத் துன்பம் ஏற்படக்கூடும். எனவே, அகிம்சையைக் கட்டாய நோன்பாகக் கொண்டுள்ள சந்நியாசிகள் ஆஷாட பௌர்ணமியன்று வியாஸ பூஜை செய்து, அன்று தொடங்கி நான்கு மாதங்கள் (அல்லது, குறைந்த பட்சம் நான்கு பட்சங்கள் அல்லது இரண்டு மாதங்கள்) ஒரே இடத்திலேயே தங்கி, பிரம்ம வித்யை அறிந்த ஆசாரியர்களுடன் ஆத்ம விசாரத்தில் ஈடுபடுகின்றனர். இவ்விரதமே சாதுர் மாஸ்யம் எனப்படுகிறது.

## வியாசரின் பெருமை

ஆனால், வியாச பூஜை என்னும் பெயர் எதனால் ஏற்பட்டது! பூஜையில் வியாசருக்கு ஏன் சிறப்பிடம்! நமது சநாதன தர்மத்தையும் பண்டைய வாழ்க்கை முறையையும், மானிட வாழ்வின் இலட்சியத்தையும் கடவுள் தத்துவத்தையும் விளக்கும் தொன்மையான நூல்களுள் ஒரு சிலவேனும் இன்று நம்மிடை உள்ளன என்றால், அதற்குக் காரணம் மகரிஷி வியாசரே ஆவார். காலப் போக்கில் யுகங்கள் மாறும்போது, கலியுகத்தில் மனிதர்களின் அறிவும் ஆற்றலும் குறைந்து போக நேரிடுகையில் வேதம், நீதி மற்றும் மனித குலத்தின் சமுதாய நெறிகள் முற்றிலும் நலிவுற்றுப் போய் விடாமல் அவற்றைக் காப்பாற்றித் தருவதற்காக பகவான் விஷ்ணுவே வியாச உருவில் அவதரித்ததாகக் கருதப்படுகிறது.

கிருத யுகம், திரேதாயுகம், துவாபரயுகம் மற்றும் கலியுகம் அடங்கிய ஒவ்வொரு சதுர்யுகத்திலும், துவாபர யுகத்தின் முடிவில், ஆல் போல் தழைத்து விரிந்த வேதத்தைப் பயில்வது ஆற்றல் குறைந்த வேதியர்களுக்குக் கடினமாகி விடும் என்பதால், வேதத்தை எளிதில் பயிலும் வகையில் நான்காகப் பிரித்தும், எல்லோருக்கும் வாழ்க்கை உயர்விற்குப் பயன்படும் வகையில் மகா பாரதம், புராணங்கள் ஆகிய இலக்கியங்களையும், அனைத்தையும் துறந்து, ஆன்ம ஞானத்திலேயே ஆர்வமுள்ள துறவிகளுக்கு உபயோகமாயிருக்கும் பொருட்டு பிரம்ம ஸூத்ரம் என்னும் ஞான நூலையும் இயற்றியும் நமது சநாதன தர்மத்தையும் பாரம்பரியத்தையும் தொடர்ந்து இருக்கும் படி செய்த மகான் வியாசர். "முனிவர்களுள் வியாசராக இருக்கிறேன்" ('முனீனாமப்யஹம் வ்யாஸஹ) என்று கண்ணனே பகவத் கீதையில் (10,37) கூறியுள்ளார் என்றால், வியாசரின் பெருமையை உணரலாம்.

---

இம்மாதம் 17-ம் தேதி நாடெங்கும் வியாச பூர்ணிமை கொண்டாடப்படும்.

---

## வியாச பூஜை

'கிருஷ்ண பஞ்சகம்' (கிருஷ்ணனை மையமாகக் கொண்ட கிருஷ்ணன், வாசுதேவன், பிரத்யும்னன், அநிருத்தன், சங்கர்ஷணன்), 'வியாச பஞ்சகம்' (வியாசரை நடுவில் கொண்ட வியாசர், பைலர், வைசம்பாயனர்,

திரு. அ. நடராஜன் - திருப்பதி.

ஜைமினி, ஸுமந்து), 'ஸனக பஞ்சகம்' (ஸனகரை மையமாகக் கொண்ட ஸனகர், ஸனந்தனர், ஸனாதனர், ஸனத்குமாரர், ஸனத்ஸுஜாதர்), 'குரு பஞ்சகம்' (அதாவது, பூஜை செய்யும் சந்நியாசியின் குரு, பரமகுரு, பராமஷ்டிகுரு, பராபரகுரு, ஏனைய குருமார்கள் மற்றும் ஆசாரியர்கள்), சுகப் பிரம்மம், நாரதர், க்ஷேத்ர பாலர்கள், திக்பாலகர்கள், சரஸ்வதி மற்றும் விக்னேச்வரர் முதலிய தேவதைகளையும் சுத்த சைதன்யமாக விளங்கும் பரம்பொருளையும் விதிமுறைப்படி பூஜை செய்து, உயர்ந்த ஆன்ம வாழ்வுக்கு வழி காட்டும் இம்மகான்களுக்கு நன்றி செலுத்துவதே வியாச பூஜையின் சிறப்பு அம்சமாகும்.

## வியாசரின் தந்தை

மஹா விஷ்ணுவான நாராயணனிடமிருந்து தோன்றியவர் பிரம்மா. அவரிடமிருந்து உண்டாகியவர் வசிஷ்டர். வசிஷ்டரின் தனயன் சக்தி, சக்தியின் புத்திரர் பராசரர். தமது முன்னோர்களைப் போலவே பராசரரும் மறைகள், ஸ்மிருதிகள் மற்றும் தர்ம சாஸ்திரங்கள் ஆகியவற்றை முழுமையாகக் கற்றறிந்தவர். தவப்பெருமை உடையவர். அவரே வியாசரின் தந்தை.

அதை அறிவதற்கு அல்லது அடைவதற்கு வேதாந்தம் அல்லது உபநிஷத்துக்களில் ஆராயப்பட்ட ஞான மார்க்கமே சிறந்தது என்பதைத் தெளிவாகவும் விளக்கங்களுடனும் எடுத்துக்காட்டியவர் வியாசரே ஆவார்.

அவர் தமது வேதாந்தக் கருத்துக்களுக்கு ஒரு சுருக்கமான வடிவம் கொடுக்க விரும்பினார். பத்ரி நாத்திற்கு அருகில் உள்ள வியாசகுகை எனப்படும் இடத்திற்குச் சென்றார். அங்கு எவ்வகை இடைஞ்சலுமின்றி வேதப்பகுதிகளைத் தேர்ந்தெடுத்து, வேதக் கருத்துக்களைக் கோர்வையாகத் தொகுத்து, சிறுசிறு சூத்திரங்களாக அமைத்தார். வேதாந்தத் தத்துவவியற்கொள்கைக்கு அடிப்படையாக விளங்கும் அவ்வமைப்பே 'பிரம்ம சூத்திரம்' எனப்படும் கிரந்தமாகும்.

## வேத வியாசர்

ஒரு நாள் சரஸ்வதி நதிக்கரையில் அமர்ந்து எதிர் காலத்தைப் பற்றிய சிந்தனையில் வியாசர் ஆழ்ந்திருந்தார். கலியுகத்தில் மனிதனுடைய ஆயுள், அறிவாற்றல், வேத கர்மங்களில் ஈடுபடுதல் முதலியன குறைந்து விடும் என்பதும், உலகில் அதர்ம இருள் பரவும் என்பதும், எனவே, வேதத்தைக் காப்பாற்ற வேண்டும் என்பதும் அவருக்கு விளங்கின. கலியுகத்து மனிதர்களின் குறைந்த சக்திக் கேற்ப, சூட்சுமமான தத்துவங்களையும் கடினமான சடங்குகளையும் விரிவாகக் கூறும் எல்லையற்ற வேதத்தை நான்கு பகுதியாகப் பிரித்தார். ரிக்வேதத்தை பைலர் என்னும் சிஷ்யருக்கும், யஜுர் வேதத்தை வைசம்பாயனருக்கும், ஸாம வேதத்தை ஜைமினிக்கும், அதர்வண வேதத்தை ஸுமந்துவிற்கும் உபதேசித்து, அவற்றைப் பாதுகாத்துப் பரப்பும்படி சொன்னார். ஒவ்வொரு வேதத்திலும் சாகைகள் அல்லது கிளைகள் அமைக்கப்பட்டன. ஒரு மனிதனால் எளிதில் படிக்கக் கூடிய பகுதி சாகை. 'வியாஸ' என்றால் பகுப்பது அல்லது பிரிப்பது என்று பொருள். அளவற்றுப் பெருகியிருந்த வேதத்தை எளிய பகுதிகளாகப் பிரித்தவர் (வியாஸப்படுத்தியவர்) ஆதலால், அவர் 'வேத வியாசர்' என்று அழைக்கப்படலானார்.

## புராணங்களும் மகாபாரதமும்

வேதத்தில் கூறப்பட்டுள்ள நுட்பங்களைப் புரிந்துகொண்டு, யாகம் முதலிய கர்மங்களைச் செய்வதற்கான பயிற்சியைப் பெற்றிருந்த ரிஷிகள் வேதங்களைப் பயின்று அவற்றைப் பரப்பினார்கள். வேதத்தில் கட்டளை அல்லது ஆணை வடிவில் உள்ள கருத்துக்களை, நண்பன் கூறுவதைப் போல் இதமாக விளக்கும் வகையில் பல புராணங்களையும் அவர் இயற்றி, ரோம ஹர்ஷரின் புதல்வரான சூதருக்கு அவற்றை விளக்கமாகச் சொல்லி, அவற்றை மக்களிடையே பரப்பும்படி பணித்தார். வேதக் கருத்துக்களையும் தர்மத்தின் தத்துவங்களையும் எளிய சாதாரண மக்களும் புரிந்துகொள்ளும்படி அவற்றை உரிய இடங்களில் வைத்து மகா பாரதம் என்னும் இதிகாசத்தையும் இயற்றினார். நான்கு வேதங்களுக்குப் பின்னர் இயற்றப்பட்டதால் அது ஐந்தாவது வேதம் என்னும் பெயர் பெற்றது. அதில் விளக்கப்படாத அறவியல் நுட்பங்களே இல்லை என்று சொல்லலாம்.

சத்தியவதிக்கும் சந்தனு அரசனுக்கும் பிறந்த விசித்திர வீரியனின் வழித்தோன்றல்களான கௌரவர்களுக்கும்பாண்டவர்களுக்குமிடையே நிகழ்ந்த பாரதப் போரில், தர்ம வாழ்வை நிலை நிறுத்தச் செய்வதே தமது இலட்சியம் எனக் கூறும் வியாசர் முக்கியமான பல கட்டங்களில் தோன்றி, பாண்டவர்களுக்கு ஆறுதல் கூறி, அவர்களைத் தேற்றுவதைப் பார்க்கலாம். அவர்கள் வெற்றி தர்மத்தின் வெற்றி என்றார் அவர்.

## சுகரும் பாகவதமும்

தமக்கு ஒரு மகன் வேண்டும் என்று வியாசர் விரும்பினார். அதற்காகக் கடுமையான தவம் செய்தார். அவர் விரும்பியவாறே 'பக்தி நிறைந்து, ஐம்பூதங்களுக்குச் சமமான வீரமுடைய புத்திரன் பிறப்பான்' என்று சிவன் வரமளித்தார்.

ஒருநாள் காலை அக்னி உபாசனைக்காக நெருப்பு உண்டாக்கிக்கொண்டிருந்தபோது கிருதாசீ என்னும் அப்சரப் பெண் கிளி உருவில் அங்கு வந்தாள். அவள் உண்மை உருவை உணர்ந்த வியாசர் காதல் வயப்பட்டார்; அவளிடம் உண்டானவர் சுகர். பிறக்கும் போதே பிரம்ம ஞானியாக விளங்கிய மகான். சுகருக்கு தர்மம், வேதம், தரிசனங்கள் ஆகியவற்றின் நுட்பங்களை எல்லாம் மிகவும் விவரமாக உபதேசித்தார் வியாசர்.

ஆனாலும், பாசம் வியாசரை வருத்தியது. நற்காரியங்கள் பலவற்றைச் செய்திருந்தும் கூட அவருக்கு மன அமைதி இல்லாதிருந்தது. அதற்குக் காரணம் என்ன என்பதை அறிந்து கொள்ள விரும்பினார். அப்போது நாரத மகரிஷி அவர் முன்பு தோன்றினார்; தமது மனவியாகுலம் பற்றி வியாசர் அவரிடம் சொன்னார்: ''தர்மங்களையும் வேத தத்துவங்களையும் நீங்கள் சிறப்பாக எடுத்துக் கூறியிருக்கிறீர்கள் என்பது என்னவோ உண்மைதான். ஆனால், பகவான் பக்திக்குக் கட்டுப்பட்டவர் ஆயிற்றே. வாசுதேவனுடைய பெருமையைப் பற்றி நீங்கள் சொல்லவில்லையே! பக்தியே பாவத்தை எளிதில் போக்க வல்லது. பக்தி செய்யத் தொடங்கி விட்டால் எப்பிறவியிலும் அது நீங்காது. எனவே, பக்தி செய்பவன் எப்படியும் முக்தி அடைந்து விடுவான். ஆகவே ஹரியின் கதையைச் சொல்வதுதான் உங்களுக்கு அமைதி காண வழியாகும்'' என்று நாரதர் கூறினார்.

இதைக்கேட்ட வியாசர் சரஸ்வதி நதிக்கரையிலுள்ள சம்யாப்ராசம் என்னும் ஆசிரமத்திற்குச் சென்று, தியானத்தில் ஈடுபட்டார். ''முக்குணங்களுக்கு அடிமையான ஜீவன், தான் அவற்றுக்கு அப்பாற்பட்டவன் என்பதை அறியாது, குணங்களின் சேர்க்கையினால் பலவாறு துன்பமடைகிறான். நாராயணனைப் பக்தியுடன் வழிபடுவதுதான் இத்துயரத்தை நீக்கும்'' என்பதைக்கண்டுணர்ந்து, நாராயணனின் அவதாரங்களை எடுத்துச் சொல்லும் பாகவதம் என்னும் புராணத்தை இயற்றினார். தாம் இயற்றிய பாகவதத்தைச் சுகருக்கு உபதேசம் செய்தார். அப்போதுதான் வியாசருக்கு மனத்தில் அமைதி உண்டாயிற்று.

(அடுத்தப் பக்கம் பார்க்க)

*சென்ற இதழ்த் தொடர்ச்சி*

# வேதாங்கம்



**சந்தஸ் :—** மந்திரங்கள் பெரும்பாலும் செய்யுள் வடிவம் கொண்டவை. செய்யுள்கள் எந்த சந்தஸ்ஸில் அமைந்துள்ளன என்ற அறிவை கற்பிக்கும் சாஸ்திரத்திற்கு 'சந்தஸ்' எனப்பெயர். வேதத்திற்கே 'சந்தஸ்' என்ற மறு பெயரும் உண்டு.

பொதுவாக எந்த வாக்கியமும் கேட்பதற்கும் படிப்பதற்கும் மதுரமாக இருந்தால்தான் செய்யுள் ஆகிறது. गेये पाठ्ये च मधुरम् (கேயே, பாட்யே ச மதுரம்) என்று வான்மீகி ராமாயணத்தில் கூறப்படுகிறது. ஒரு சொற்றொடர் எவ்வாறு மதுரமாகவும், ச்ராவ்யமாகவும் ஆகிறது என்றால் அது சந்தஸ்ஸினால் தான். அது எவ்வாறு என்று பார்ப்போம்.

ஒரு முறை வால்மீகி முனிவர் தன் சிஷ்யனை பரத்வாஜருடன் கங்கையில் மத்யான்ன ஸ்நானம் செய்ய கங்கையை நோக்கி வருகிறார். அவர் மனமோ ஸ்ரீ ராமரின் கல்யாண குணங்களை எண்ணிக் கொண்டிருக்கிறது. தமஸா நதியின் அருகில் வந்தவுடன் சுற்றுமுற்றும் பார்த்தார். ஒரு விருக்ஷத்தின் அடியில் ஒரு வேடன், அதன் கிளையில் இரு பக்ஷிகள்—ஆணும் பெண்ணும்—விளையாடிக் கொண்டிருக்கும் பொழுது, அதில் ஆண் பக்ஷியை அடித்தான். பெண் பக்ஷியோ துடித்துக் கதறியது. ரிஷியின் மனமோ கருணையால் நிரம்பித் தவித்தது. உடனே கோபத்துடன் அவ்வேடனை நோக்கி சொல்கிறார். இங்கு ராமாயணம் பிறக்கிறது.

मा निषाद प्रतिष्ठां त्वमगमः शाश्वतीस्समाः ।
यत् क्रौञ्चमिथुनादेकमवधीः काममोहितम् ॥

'' மாநிஷாத ப்ரதிஷ்டாம் த்வமகம:
சாச்வதீஸ்ஸமா
யத் க்ரௌஞ்சமிதுனாதேகமவதீ
காம மோஹிதம்''

இவ்வாறு வேடனை நோக்கி சபிக்கும் பொருட்டு எழுந்த வாக்கியம் ஸ்ரீ ராமாயணத்தை ஆரம்பிக்கும் த்யான ஸ்லோகமாக பரிணமித்தது. ஆனால் அதை அவர் அறியவில்லை. பின் ஸ்நானம் முடிந்து விட்டு செல்லும் பொழுது "ஆகா! ஸ்ரீ ராமனை நினைத்துக்கொண்டு வந்து விட்டு ஒரு வேடனை சபிக்கும்படி ஆகிவிட்டதே! என்ன அபசாரம் செய்தேன்' என்று வருந்துகிறார். அப்பொழுது தான் சபித்த வாக்கியத்தைத் திரும்பத் திரும்ப எண்ணிப்பார்க்கும் பொழுது அவ்வாக்கியம் ராமனைத் துதிக்கும் ஒரு அற்புத வாக்கியமாக அமைந்திருப்பதைக் கண்டார். பிறகு சொல்கிறார். ''இவ்வாக்கியம் இலக்கண வழியில் நன்றாக அமைந்துள்ளது. சங்கீத வழியிலும் சந்தஸ்ஸுடனும், தாளத்துடனும் அமைந்துள்ளது. இது சோகத்தில் வந்தது ச்லோகமாகவே ஆக வேண்டும்'' என்று கூறுகிறார்.

இவ்வாறு ஒரு ஸ்லோகம் சந்தஸ்ஸினால்தான் இனிமையாகவும், கேட்பதற்கு ஏற்றதாகவும் மாறுகிறது என்பதைக் காணலாம். செய்யுள் பலவகையாக இருந்தால் சந்தஸ்ஸுகள் பலவகைப்படும். சந்தஸ்ஸுகள் சில ஓரடி, 2 அடி, 3 அடி, 4 அடி, 5 அடி, 6 அடி, 7 அடி, 8 அடி முதலியனவாகவும், அவை காயத்ரி, உஷ்ணிக், அனுஷ்டுப், ப்ருஹதி, பங்க்தி, த்ரிஷ்டுப், ஜகதி என்றும் சொல்லப்படுகிறது.

சந்தஸ்ஸுகள் அக்ஷரங்களின் எண்ணிக்கையில் அமைகிறது. விருத்தங்கள் அவைகளின் மாத்திரையையும் கணக்கிட்டு அமைகிறது. பொதுவாக இராமாயணம், மஹாபாரதம் முதலியன அனுஷ்டுப் விருத்தத்தில் அமைந்திருக்கிறது.

வேத காலத்து விருத்தங்களான அனுஷ்டுப், காயத்ரீ, உஷ்ணிக் முதலியன இப்போது காணப்படும் ஸ்ரக்தரா, மண்டக்ரந்தா வ்ருத்தங்களை ஒத்து இருக்கிறது. நாராயண பட்டதிரி இயற்றிய 'நாராயணீயம்' ஸ்ரக்தரா வ்ருத்தத்தில் அமைந்துள்ளது.

अग्रे पश्यामि तेजोनिबिडतरकलायावली लोभनीयं
पीयूषाप्लावितोऽहं तदनु तदुदरे दिव्यकैशोरवेषं
तारुण्यारम्भरम्यं परमसुखरसास्वादरोमाञ्चिताङ्गैः
रावीतं नारदाद्यैर्विलसदुपनिषद् सुन्दरी
मण्डलैश्च ॥

அக்ரே பச்யாமி தேஜோநிபிடதரகலா
யாவலீ லோபனீயம்
பீயூஷாப்லாவிதோஹம் ததனு தது தரே
திவ்யகைசோர வேஷம்
தாருண்யாரம்பரம்யம் பரமசுகர ஸாஸ்-
வாத ரோமாஞ்சிதாங்கை ராவீதம்
நாரதாத்யைர் விலஸதுபநிஷத்
ஸுந்தரீ மண்டலைச்ச

பதஞ்சலி மஹரிஷி நடராஜப் பெருமானின் மீது शम्भु नटनं (சம்பு நடனம்) என்ற ஸ்தோத்திரம் இயற்றியிருக்கிறார்.

सदञ्चितमुदञ्चित निकुञ्चितपदं झलझल-
ञ्चलित मञ्जुकटकं
पतञ्जलि दृगञ्जनमनञ्जनमचञ्चलपदं
जननभञ्जनकरम् ।

(36-ம் பக்கம் பார்க்க)

---

வியாச பகவான் விஷ்ணுவின் அவதாரமாகக் கருதப்படுபவர். சநாதன தர்மத்தின் ஆணி வேரான வேதங்களைக் காப்பாற்றி, ஆன்ம வாழ்வின் நலம் கலியுகத்தில் மக்களுக்குச் சுலபமான முறையில் கிடைக்கும்படி செய்தவர்.

வியாஸம் வஸிஷ்ட நப்தாரம்
சக்தே: பௌத்ர மகல்மஷம் !
பராசராத்மஜம் வந்தே
சுகதாதம் தபோநிதிம் ||

''வசிஷ்டருடைய கொள்ளுப் பேரரும், சக்தியின் பேரரும், பராசரரின் மகனும், சுகரின் தந்தையும், தவச் செல்வருமான வியாசரை வணங்குகிறேன்.''

★

# மடல் இலக்கியத்தில் பக்தி

"திருமாலே பரம் பொருளாக, மேல் ஒரு பொருளும் இல்லா மெய்ப் பொருள்" என்ற வைணவக் கோட் பாட்டில் எழுந்தவையே ஆழ்வார் களின் பாடல்கள். இக்கோட்பாட் டினை அடியொற்றி எழுந்தவைகளே திருமங்கை ஆழ்வாரின் பெரிய, சிறிய திருமடல்கள். இவரது பக்தியின் தன்மை ஏனையோரது நிலையில் இருந்து மாறுபடுகிறது. ஆண்டா ளின் பாடல்கள், இறைவன் மீது கொண்ட பக்தி காதலாக மலர்ந்து தொண்டாகக் கனியும் "பிரபத்தி" நெறியைப் பின்பற்றி அந்நெறியைப் பரப்புவனவாய் உள்ளன. ஆனால் திருமங்கை ஆழ்வார் "நாயகி-நாய கன்-பாவம்" என்னும் முறையினைக் கையாண்டுள்ளார்.

இறைவன் மீது கொடுள்ள பக்தி யின் நிலை அதிகமாகும் போது இறை வனுக்கும், பக்தனுக்கும் இடையே உறவுநிலை உண்டாகுகிறது. இந்நிலை யில் பக்தன் இறைவனை, தனக்கு விருப்பமான பொருளாக எடுத்துக் கொண்டு தன்னுடைய பக்தியினைச் செலுத்துகிறான். இந்நிலையில் ஒன் றாக "ஆண்-பெண்" காதல் உணர்வு சிறப்புறுகிறது. இவ்வாறு இறைவன் மீது கொள்ளும் காமம் "பகவத் காமம்" என்பர். உலகியற் காமத்தை "விஷயகாமம்" என்பர். திருமங்கை ஆழ்வார் தமது பாசுரத்தில் "பகவத் காம" முறையைப் பின்பற்றிப்பாடி உள்ளார்.

ஆண்டவன் மீது ஏற்பட்ட காத லால் ஆழ்வார் தம்மை ஒரு பெண் ணாக உருவகித்துப் பாடுகிறார்,

" காரார் குழலெடுத்துக் கட்டிக்
கதிர்முலையை
வாரார வீக்கி மணிமேகலை திருத்தி
ஆரார் அயில் வேற்கண்
அஞ்சனத்தின் நீறணிந்து
சீரார் செழும் பந்து கொண்டடியா
நின்றேன் யான் "
*(சிறிய திருமடல்)*

என்றும்,

காதலனாகிய எம்பெருமானைக் கண் டவுடன் தனது நிலையை வெளிப் படுத்தும் போது,

" ..................சென்றேன்
என்வல்வினையால்
காரார் மணிநிறமும் கைவளையும்
காணேன் "
*(சிறிய திருமடல்)*

என்றும் கூறுகிறார்.

" என்னுடைய நெஞ்சும் அறிவும்
இனவளையும்
பொன்னியலும் மேகலையும்
ஆங்கு ஒழியப் போந்தேற்கு "
*(பெரிய திருமடல்)*

என்றும் கூறுகிறார்.

இறைவன் மீது பக்தி கொள்ளு தல் என்பது, கண்ணிற்கு புலனாகாத "மோட்சம்" என்ற ஒன்றினை அடை வதற்கு வழி வகுப்பதாகும் என்ற கருத்தினை ஆழ்வார் மறுக்கிறார் இப்பிறவியிலேயே அது பேரின்பத் தினை தரவல்லது என்கிறார். மோட் சத்தில் சிறிதும் விருப்பமின்றி, அதனைப் பெரிய திருமடலில்,

" இன்ன தோர்காலத்து இனையார்
இதுபெற்றார்
என்னவும் கேட்டறிவதில்லை
உளதென்னில்
மன்னும் கடுங்கதிரோன்
மண்டலத்தின் நன்னடுவுள்
அன்னதோர் இல்லியின்
ஊடுபோய் வீடு என்னும்
தொன்னெறிக்கண் சென்றாரைச்
சொல்லுமின்கள் "

என்கிறார்.

இறைவனை வழிபடுவதை நீக்கி மோட்சத்தை விரும்புகிறவர்களை நோக்கி,

" ஏரார் முயல் விட்டுக் காக்கைபின்
போவதே "
*(சிறி. திரு.)*

என்கிறார்.

"நான்முகன் படைத்த வேதமாகிய தருமம், அர்த்தம், காமம், மோட்சம் போன்றவற்றுள், அர்த்தம், தர்மம் முதலியன காமமே பயனாகத் தோன் றுவதாம். அக்காம புருஷார்த்தத்தி னுடைய நிலை என்ற வழியாக பகவத் காம மார்க்கத்திலே நாம் ஊற்ற முடையோராய் இருப்போம்" என் கிறார்.

மேலும் வைணவ நெறிப்படி இறை வனை அடையும் வழிமுறைகள் நான் காகும். அவை ஞானம், யோகம், கிரியை, சரிதை என்பனவாகும். இவற்றுள் "இறைவனன்றி பிரி தொரு நிலை வேறில்லை" என்னும் ஞான நெறியை திருமங்கை ஆழ் வார் பின்பற்றுகிறார்.

மேலும் தமிழர் மரபில் மடல் ஊர்வது என்பது விலக்கப்பட்ட ஒன்றாகும். இதனைத் தொல்காப்பி யமும்,

" எத்திணை மருங்கினும் மகடூஉ
மடல் மேல்
பொற்புடை நெறிமை இன்மையான"
என்கிறார்.

---

திரு. நா வகுளாபரணன், எம்.ஏ.,
ஆழ்வார் திருநகரி

---

இயல்பினால் பெண்ணாகிய ஆண் டாள் கூட தம்முடைய பாசுரத்தில் மடல் ஊர்தல் பற்றி எங்கும் குறிப் பிடவில்லை.

ஆனால் ஆழ்வார் இதனை எல்லாம் மறுத்துக்கூறும் போது,

"மான்போன்ற நோக்கையும் அன் னம் போன்ற நடையையும் உடைய மாந்தர்கள், பழிதூற்றும்படி புரு ஷர்கள் மேலே மடல் ஊரக்கூடாது என்று சொல்லுவர் தமிழர். அந்த வாக்கியத்தைத் தெளிவுடையதாக நாம் நினைக்கமாட்டோம். சிறந்த வட நூலில் கூறிய வழியையே பின்பற்று வோம்" என்கிறார்.

இவ்வாறாக திருமங்கை ஆழ்வார் திருமாலின்மீது புதுமையான முறை யில் பக்திகொண்டு, ஏனையோருக்கு ஒரு வழி காட்டியாய் உள்ளார் என் பது நன்கு விளங்கும் இவரது இம் முறையினைச் சிந்தையில் கொண்டு தான் மகாகவி பாரதியாரும் "கண் ணன் பாட்டில்" கண்ணனைத் தன் சேவகனாகப் பாவித்துப் பாக்களைப் பாடியுள்ளார். ★

# திருமாலின் திரு அவதாரங்கள்

புலவர். மா. சீதாராமன் M.A., B.Ed.
பெருங்கட்டூர்.

பின்னர், இராமன் தம் மனைவி யும் மற்றவர்களும் உடன்வரக் கொண்டு அயோத்திக்குப் புறப்பட் டான். இடையில், பரசுராமர் கையில் வில்லை ஏந்தி பரசுராமர் வழி மறித்தார். வீரம் பேசி நின்ற பரசுராமரின் வில்லினை இராம பிரான் பங்கம் செய்தார். வலிமை யிழந்த பரசுராமர் தவம் புரிந்திட மகேந்திர மலை நோக்கிச் சென்று விட்டார். பின்னர், அனைவரும் அயோத்தி வந்தடைந்தனர்.

ஆண்டுகள் பல கழிந்தன. தசர தன் தன் முதுமையை உணர்ந்தான்.

எனவே, இராமபிரானுக்கு முடி சூட்ட முடிவு செய்தான். நாளும் குறிக்கப்பட்டது. நகரெங்கும் விழாக்கோலம் பூண்டது.

கைகேயியின் அரண்மனைத் தாதி மந்தரை என்பவள் கூனி. கூனிக்கு இராமபிரானின் முடி சூட்டு விழா பற்றிய செய்தி எட்டியது. கூனி கைகேயியிடம் சென்றாள்; சூழ்ச்சி செய்து கைகேயியின் மனத்தை மாற் றினாள். பரதன் நாடாளவும், இராம பிரான் காடாளவும் வரம் கேட்கு மாறு கைகேயிக்குத் துர்ப்போதனை செய்தாள். மனம் மாறிய கைகேயி மன்னனிடம் மன்றாடி வரத்தைப் பெற்றுவிட்டாள். எனவே, இராம பிரானின் முடி சூட்டு விழா தடைப் பட்டது.

இராமபிரானை அழைத்து வர ஆணையிட்டாள் கைகேயி! மன்னனின் ஆணை என்று சொல்லித் தன் விருப் பத்தை இராமனுக்கு எடுத்துக் கூறி னாள் கைகேயி. சிற்றன்னையின் சொல்லைச் சிரமேற்கொண்டார் இராமபிரான்! அவர் முகம் அன்ற லர்ந்த செந்தாமரைபோல் காட்சி யளித்தது. அனைவரிடமும் விடை பெற்றுக் கானகம் புறப்பட்டார் காகுத்தன்! பிராட்டியும் இலக்கு வனும் பிரியாது உடன் சென்றனர்.

கானகம் செல்லும் இராமபிரானைப் பிரிய மனமில்லாது அயோத்தி நகர மக்களும் தொடர்ந்து சென்றனர். அனைவரும் சிருங்கிபேரபுரம் என்ற ஊரை அடைந்தனர்; அன்றிரவு அங்கேயே படுத்துறங்கினர். தன்னைத் தொடர்ந்து வரும் அன்பு மக்களைப் பிரிந்து, அவர்கள் உறங்கும் வேளை யில் அவ்விடத்தை விட்டகன்றார் இராமபிரான்! விடிந்தபின், இராம பிரானைக் காணாது அயோத்தி நகர மக்கள் அழுது புலம்பி அயோத்திக்கே மீண்டனர்.

கங்கைக் கரைக்கு உரியவன் குகன் என்பவன்; கணக்கற்ற படகுகளுக்குச் சொந்தக்காரன்; தாயினும் தயவு டையவன். குகன் இராமபிரானைக் கண்டு தன் மனத்தைப் பறி கொடுத் தான். கங்கைக்கரை வந்துற்ற இராமபிரானைக் கண்ணாரக் கண்டு பணி விடைகள் பல செய்து நல்லுப சாரம் செய்து நின்றான். குகனின் தூய அன்பில் தோய்ந்து மகிழ்ந்த இராமபிரான் குகனைத் தன் தம்பி யாக ஏற்று அருள் புரிந்தார். வேடர் குலத்தலைவன் பெற்ற பெரு வாழ்வை வேறு யாரே பெற முடியும்? சீதா ராமலக்குவரைக் கலத்தில் ஏற்றி அக்கரைக்குக் கொண்டு சென்றான் குகப் பெருமான்! பின்னர், இராம பிரான் அங்கிருந்தும் நீங்கிப் பரத்து வாச முனிவருடைய இருப்பிடம் சேர்ந்தார். பரத்துவாசர் இராம பிரானை வரவேற்று உபசரித்து மகிழ்ந்தார். "சித்திர கூடமே தங்கி உறைவதற்கேற்ற சிறந்த இடம்!" என வழிப்படுத்தினார் பரத்துவாசர். மூவரும் முனிவரை வணங்கி சித்திர கூடம் சார்ந்தனர்.

பிராட்டியுடனும், பிரியமான தம்பி யுடனும் சில காலம் சித்திர கூடத் தில் தங்கியிருந்தார் சீதா ராமர்! இதற்கிடையே, பாட்டன் வீடு சென் றிருந்த பரதனும் சத்துருக்கனனும் அயோத்திக்கு மீண்டனர். நடந்த வற்றையெல்லாம் பரதன் கேட்டறிந் தான். தன் தமையனாரின் திருவடி களில் வீழ்ந்து வணங்கி அவரை மீள வும் நாட்டுக்கே அழைத்து வருவ தென்று முடிவு செய்து புறப்பட் டான்; சித்திரகூட மலைக்கு வந்தான்; அண்ணன் திருவடிகளைக் கண்ணீரால் கழுவினான். தன் தம்பியின் அள விறந்த அன்பினைக் கண்டு உள்ளம் உருகிய இராமபிரான் தன் பாதுகை களைப் பரதனுக்குத் தந்து அருள் புரிந்தார். பிரிய மனமின்றிப் பர தனும் விடைபெற்று நந்திக்கிராமம் சென்று வாழ்ந்து வந்தான்.

சில காலம் சென்றபின், சித்திர கூடத்திலிருந்தும் புறப்பட்டுத் தண்டகாரண்யம் சென்று சேர்ந்தனர்

சீதாராம லக்குவர். தண்டகாரண்ய முனிவர்கள் தசரத ராமனை வாழ்த்தி வரவேற்றனர். முனிவர்களின் நல்லாசி பெற்று அங்கிருந்தும் புறப்பட்டனர். வழியில் விராதன் என்பான் எதிர்ப்பட்டான். எதிர்ப்பட்ட விராதன் இடையூறு விளைவிக்க முற்பட்டான். எனவே, இராமலக்குவர் விராதனை வெட்டி வீழ்த்தினர். விராதன் முற்பிறப்பை யுணர்ந்தான். திருமாலே இராமன் என்பதறிந்து பலவாறு போற்றிப் பரவினான். பின்னர் அவன் நல்லுலகம் சேர்ந்தான். அதன்பின், மூவரும் பஞ்சவடி என்னும் அழகிய இடத்தைச் சார்ந்தனர்; அங்கேயே மகிழ்வுடன் வாழ்ந்து வந்தனர்.

வஞ்சனையே வடிவான சூர்ப்பநகை என்பவள் ஒரு நாள் அங்கே வந்து சேர்ந்தாள். இராமபிரானின் வடிவழகில் தன் மனத்தைப் பறிகொடுத்தாள். எவ்வாறேனும் இராமபிரானை அடைய வேண்டும் என்ற எண்ணத்தில் சீதையை அகற்ற முற்பட்டாள். இதையறிந்த இளைய பெருமாள் அவ்வரக்கியைப் பங்கப்படுத்தி அனுப்பி விட்டார். சூர்ப்பநகைக்கு நேர்ந்த அவமானத்தைக் காணச் சகியாத கர, தூஷணர் முதலானோர் இராமனை எதிர்த்தனர். ஆனால் இராமரின் அம்போ அனைவரையும் விண்ணுலகுக்கு அனுப்பியது.

தங்கைக்கு நேர்ந்த பங்கத்தை யறிந்து சினந்தான் இராவணன்! 'பழிக்குப் பழி சீதையைக் கைப்பற்றுதலே!' எனத் துடித்துப் புறப்பட்டான்! துணையானான் மாரீசன்! மாயமானாயினன். மாயமானைப் பற்றித் தருமாறு ஜானகி பெருமானைக் கேட்டார். பெருமானும் பெண் பேச்சைக் கேட்டார்! விளைவு? பிராட்டி தனிமைப்படுத்தப்பட்டார். விபரீத எண்ணத்துடன் அன்னையைக் களவாடிச் சென்றான் இலங்கை வேந்தன்!

ஆவியைப் பறி கொடுத்ததைப் போன்று அழுது புலம்பினார் அண்ணல்! பல இடங்களி[illegible] யைத் தேடிப் பார[illegible] சடாயு என்ற[illegible] டார். இராவண[illegible] யைக் கவர்ந்து சென்ற[illegible] சடாயு கூறக் கே[illegible] பிராட்டியை மீட்க[illegible] இராவணனால் ஊறு[illegible] சடாயு அப்போது உயிர் நீத்தான். கழுகரசனுக்கு ஈமக்கடன்கள் செய்தார் கார்மேக வண்ணன்!

ஈமக்கடன்கள் செய்து முடித்த பின், அங்கிருந்தும் புறப்பட்டனர் இராமலக்குவர்! அவர்களைக் கபந்தன் என்பான் தன் கைகளால் பற்றினான். கபந்தனின் தோள்களை வெட்டி வீழ்த்தினர் இராமலக்குவர்! இராமனின் கரம்பட்டதால் சாபம் நீங்கப் பெற்றான் கபந்தன்! இராமபிரானைப் பலவாறு போற்றி வணங்கி நற்கதி சேர்ந்தான். பின்னர், இருவரும் பிராட்டியைத் தேடிச் செல்லலாயினர்.

இருவரும் இருசிய முகமலையைச் சென்று சேர்ந்தனர். அம்மலையின்கண், அப்போது சுக்ரீவன் என்பான் வாழ்ந்து வந்தான். தன் அண்ணனாகிய வாலிக்குப் பயந்து அங்கே அவன் அனுமன் முதலான நல்லமைச்சரோடு வாழ்ந்து கொண்டிருந்தான். இராமலக்குவரின் வருகையை அறிந்த அனுமான் தன் மன்னனாகிய சுக்ரீவனுக்கு இராமலக்குவரைப்பற்றி எடுத்துக் கூறினான். சுக்ரீவன் இராமபிரானின் நட்பைப் பெற்றான். சுக்ரீவன் வேண்டுகோள்படி இராமபிரான் வாலியை வதம் செய்தருளினார்.

வாலிவதத்துக்குப் பின் மழைக் காலம் வந்தது. மழைக்காலம் கழிந்ததும் மாதாவைத் தேடி நான்கு திசைகளிலும் வானரர்கள் பரவிச் சென்றனர். தென்திசை நோக்கி அனுமன் சென்றான். இலங்கை மாநகரில் அசோக வனத்தின்கண் பிராட்டியை அனுமன் கண்டான்!

"கண்டேன் சீதையை!" என்று களிப்புடன் தெரிவித்தான் அனுமன்! [illegible] யாளப் [illegible] டியை [illegible] இராம [illegible]

[illegible] அசோக [illegible] று செய்தி [illegible] கொண்டான்; [illegible] முட்டினான். அனுமன் [illegible] எரித்து [illegible] டான். இவற்றை [illegible] இலங்கை வேந்தன் சீறினான். இராமனுடன் போர் தொடுக்கப் போகும் செய்தியைத் தன் அமைச்சர்க்கு எடுத்துரைத்தான். 'சீதையைச் சிறை விடுதலே தக்கது' எனப் புகன்றான் விபீடணன் என்னும் தம்பி. எனினும் தம்பி சொல் அண்ணன் செவியில் ஏறவில்லை. எனவே, விபீடணர் இராமபிரானைச் சரணடைதலே தக்கதென்று முடிவுசெய்தார்; இராமபிரானைச் சரண் எனப் புகுந்தார். பகைவன் தம்பிக்கும் அபயம் அளித்துப் பண்பின் சிறப்பைப் பாருக்குணர்த்தி விட்டார் இராமபிரான்!

சீதையைச் சிறை மீட்க இராமபிரான் இலங்கைக்குப் படையை நடத்திச் சென்றார். வானரங்கள் கடல் மேல் அணையைக் கட்டின. கடல் கடந்த சேனை இலங்கை வந்து சேர்ந்தது. இராமருக்குத் துணையாக இலக்குவர், சுக்ரீவன், விபீடணன், அனுமன், வானரச் சேனைத் தலைவர்கள், வானரவீரர் முதலானோர் பலரும் சென்றனர். இச்செய்தி இராவணனுக்கு எட்டியது. அவனும் தன் படைகளைத் தயார் செய்து விட்டான்.

இராமராவண யுத்தம் தொடங்கியது. இராமபாணத்திற்கு ஆற்றாமல் இராவணன் ஓடிப் போனான். தன் தம்பி கும்பகருணனை அனுப்பிவைத்தான். கும்பகருணன் கொலைக்களப் பட்டான். பின்னர், இராவணன் மகனாகிய இந்திரசித்து போர்க்களத்துக்கு வந்தான். இளைய பெருமான் இந்திரசித்தனை யமனுலகம் அனுப்

பினர். இறுதியாக இராவணன் தேரேறி வந்தான். பொன் முடிகன் பத்தினையும் இராமபிரான் அறுத்துத் தள்ளினர். இராவணவதம் முடிந்தது.

சீதையைச் சிறைமீட்டுப் புறப் பட்டார் இராமபிரான்! அனைவருட னும் புஷ்பகவிமானம் ஏறி அயோத்தி நோக்கி வந்துகொண்டிருந்தார். விமானம் பரத்துவாசர் ஆசிரமத்தை யடைந்தது. அங்கே அனைவரும் விருந்துண்டனர். ஒரே இலையில் இராமபிரானும் அனுமனும் உணவு உண்டனர். பின்னர், நந்திக்கிராமம் சென்று பரதனையும் கூட்டிக்கொண்டு அனைவரும் அயோத்தி சேர்ந்தனர்.

அயோத்தி நகரெங்கும் விழாக் கோலம்! இராகவனுக்கு முடி சூட்டு விழா! புனித நன்னீர் கொண்டுவரப் பட்டது. வேத மந்திரங்கள் ஒலித் தன. இராமபிரானை நன்னீரில் ஆட்டி, அணிகளால் அலங்கரித்தனர். அரியணையை அனுமன் தாங்கினன். அங்கதன் உடைவாளை ஏந்தி நின் ருன். வெண்கொற்றக் குடையைப் பரதன் கவித்து நின்ருன். இலக்குவ னும் சத்துருக்கனனும் கவரி வீசி நின்றனர். அருகில் பிராட்டியார் அமர்ந்திருந்தனர். இவ்வளவு கோலா கலத்துடன் இராமபிரான் எழுந்தரு ளியிருந்தார். அப்போது பொன் முடியினை வசிட்டர் தம் கைகளால் எடுத்து இராமபிரானுக்குச் சூட்டி மகிழ்ந்தார். அனைவரும் வாழ்த்தி வணங்கினர். அனைவருக்கும் பரிசு கள் நல்கி விடை கொடுத்தனுப்பி னர் இராகவர்! பின்னர், பதினோரா யிரம் ஆண்டுகள் இராமராஜ்யம் நடைபெற்றது.

இராமாவதாரத்தின் வரலாற்றை இதுவரை மிகவும் சுருக்கமாகக் கண் டோம். இனி, இராமாவதாரத்தின் சிறப்புக் குறித்து அடுத்த கட்டுரை யில் காண்போம்!

(தொடரும்)



# பிரார்த்தனையின் அதிசய பலன்

**'சீலன்' - மதுரை**

'எண்ணிய எண்ணியாங்கு எய்துவர்' "As a man thinketh, so he becometh" என்ற வாக்கியங்கள் மனிதனுடைய எண்ணத்தின் வலிவை எடுத்துக் காட்டுகின்றன. மனிதனது எண்ணத்தினால் ஆக்கவும் இயலும், அழிக்கவும் முடியும்.

"If you send out a loving, helpful thought to another man, it leaves your brain, goes directly to that man, raises a similar thought of love in his mind and returns back to you with redoubled force.

If you send out a thought of hatred to another man, it hurts that man and hunts you also by turning back to you with redoubled force.

Therefore, understand the laws of thought, raise only thoughts of mercy love and kindness from your mind and be happy always," என்று தமது "THOUGHT POWER" என்ற நூலில் இமயஜோதி ஸ்ரீ சுவாமி சிவானந்த சரஸ்வதி கூறுவது போன்று நமது நல்ல, தீய எண்ணங்களால் பிறருக்கு நன்மையோ, தீமையோ செய்ய நம்மால் இயலும் என்பது வெளிப்படையாகிறது. அது மட்டுமல்ல, நாம் எண்ணும் நல்ல, தீய எண்ணங்கள் அடுத்தவருக்கு நல்லதையோ அல்லது தீயதையோ செய்வது ஒரு புறம் இருக்க, சுவற்றில் எறிந்த பந்து திரும்பி நம்மை நோக்கி வருவது போன்று, பிறரைக் குறித்து நாம் எண்ணும் எண்ணங்கள் அவர்களிடத்திலே பதிவை ஏற்படுத்திவிட்டுத் திரும்பவும் நம்மையே வந்து சேருகின்றன என்பது கவனம் செலுத்த வேண்டிய பகுதியாகும். ஆகவே அடுத்தவருக்கு நன்மை செய்ய விரும்புகின்றவன் மறைமுகமாகத் தனக்கே நன்மை செய்து கொண்டவனாகிறான். அதுபோல் பிறருக்குத் தீங்கு நினைக்கின்றவன் தனக்கே தீங்கிழைத்துக் கொள்பவனாகின்றான்.

நமது சமயத்தில் மட்டுமல்ல, பொதுவாக உலகத்திலுள்ள எல்லாச் சமயங்களுமே பிரார்த்தனைக்குத் தனி முக்கியத்துவம் தருகின்றன. அதிலும் குறிப்பாக மௌனப் பிரார்த்தனைக்கு (அதாவது அனைத்துயிரும் நலமாய் வாழ மனத்தினால் பிரார்த்தனை செய்வது அல்லது நல்ல எண்ணங்களை மனத்தில் உருவாக்குவது) விசேஷ சக்தி உண்டு என்பது அனைத்துச் சமயங்களின் ஒருமித்த முடிவு.

மௌனப் பிரார்த்தனையினால் மனிதர்களுக்கு மட்டுமல்ல, செடி கொடிகள் போன்ற தாவரங்களுக்கும் கூட நம்மால் மகத்தான நன்மையைச் செய்ய முடியும் என்று அண்மையில் அறிஞர்கள் செய்முறைச் சோதனை மூலம் நிரூபித்திருக்கின்றனர். தினமும் பத்து அல்லது பதினைந்து நிமிடங்கள் மௌனமாகப் பிரார்த்தனை செய்வதன் மூலம் வீட்டுத் தோட்டத்தில் வளரும் செடிகள் வியக்கத்தக்க விதத்தில் வளர்ச்சியடைந்திருக்கின்றன என்று உலகின் பல பகுதிகளில் உள்ள பயிர் வளர்ப்பு நிபுணர்கள் சோதனைகள் மூலம் நிரூபித்துக் காட்டியிருக்கின்றனர். நல்ல இசையினால் பயிர்கள் வளர்ச்சியடைகின்றன என்பது போன்று, நல்ல எண்ணத்திலும், எண்ணத்தினாலும் அவை வளர்ச்சி அடைகின்றன என்பது நவீனக் கண்டுபிடிப்பு ஆகும்.

பிரார்த்தனையினால் எவ்விதம் பயிர்கள் பயனடைகின்றன என்பது கீழ்க்கண்டவாறு விளக்கப்படுகிறது. சோதனைக்குட்படுத்தப்படும் செடிகளுக்கருகே பிரார்த்தனை செய்பவர் நின்று கொண்டு, கண்களை ஐந்து நிமிடங்கள் மூடி, "இந்தச் செடிகள் நன்கு வளர்ச்சியடைய வேண்டும்," என ஜபம் செய்ய வேண்டும். ஒருமுகமாக்கப்பட்ட எண்ண அலைகள் செடிகளைச் சென்றடைந்து அவைகளிடத்தில் மாற்றத்தை ஏற்படுத்துகின்றன. தினமும் இந்தப் பிரார்த்தனை தொடர்ந்து செய்யப்பட வேண்டும். அவ்வப்பொழுது செடிகளிடத்து ஏற்படுகின்ற மாற்றங்கள் கவனிக்கப்படவேண்டும்.

## ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில்

### தி. தி. தேவஸ்தானம் ஆந்திர ஆஷ்ரமம், ரிஷிகேஷ் உ.பி.

| | | கோடைக் காலம் | | குளிர் காலம் | |
|---|---|---|---|---|---|
| சுப்ரபாதம் | காலை | 6-00 முதல் | 6-30 வரை | 7-30முதல் | 8-00வரை |
| தோமால சேவை | ,, | 7-00 ,, | 7-30 ,, | 8-30 ,, | 9-00 ,, |
| ஸகஸ்ரநாமஅர்ச்சனை | ,, | 7-30 ,, | 8-00 ,, | 9-00 ,, | 9-30 ,, |
| அஷ்டோத்ரநாம அர்ச்சனை | ,, | 10-30 ,, | 10-45 ,, | 10-30 ,, | 10-45 ,, |
| அபிஷேகம் (வெள்ளிக் கிழமைகளில்) | ,, | 8-30 ,, | 9-00 ,, | 9-45 ,, | 10-15 ,, |
| ஸர்வ தரிசனம் | ,, | 8-15 ,, | 12-00மதியம் | 9-45 ,, | 12-00பகல் |
| | மாலை | 3-00 ,, | 8-15(இரவு) | 3-00 ,, | 6-45மாலை |
| ஏகாந்த சேவை | இரவு | 8-15 ,, | 8-30 | 6-45 ,, | 7-00மாலை |

| ஆர்ஜித சேவைகள் | ரூ.பை | நைவேத்தியங்கள் | ரூ பை |
|---|---|---|---|
| ஹாரத்தி | 0—50 | தத்யோதனம் | 45-00 |
| அஷ்டோத்ரநாம அர்ச்சனை | 2—00 | புளியோதரை | 55-00 |
| ஸகஸ்ரநாமஅர்ச்சனை | 5—00 | பொங்கல் | 50-00 |
| அபிஷேக தரிசனம் (வெள்ளிக்கிழமை) | 5—00 | இனிப்புப் பொங்கல் | 65-00 |
| குங்கும அர்ச்சனை | 1—00 | | |

## ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில்

### தி. தி. தேவஸ்தானம் ஆந்திர ஆஷ்ரமம், ரிஷிகேஷ் உ.பி.

| | | கோடைக் காலம் | | குளிர் காலம் | |
|---|---|---|---|---|---|
| சுப்ரபாதம் | காலை | 6-30 முதல் | 6-45 வரை | 8-00முதல் | 8-15வரை |
| அபிஷேகம் | ,, | 8-15 ,, | 8-45 ,, | 10-00 ,, | 10-30 ,, |
| அஷ்டோத்ரநாம அர்ச்சனை | மாலை | 5-00 ,, | 5-30 ,, | 4-30 ,, | 5-00 மாலை |
| | காலை | 8-45 ,, | 9-00 ,, | 10-25 ,, | 10-40 காலை |
| ஸகஸ்ரநாமஅர்ச்சனை | மாலை | 5-30 ,, | 6-00 ,, | 5-00 ,, | 5-30 மாலை |
| (SCT) | | | | | |
| | மாலை | 6-00 ,, | 6-30 ,, | 5-30 ,, | 6-00 மாலை |
| (SPT) | | | | | |
| தீபாராதனை | மாலை | 7-00 ,, | 7-45 ,, | 6-00 ,, | 6-45 மாலை |
| ஸர்வ தரிசனம் (ஆர்ஜித சேவைகள்— | காலை | 6-45 ,, | 12.00 ,, | 8-15 ,, | 12-00 பகல் |
| இல்லாத போது) | மாலை | 3-00 ,, | 8-30இரவு | 3-00 ,, | 7-00 இரவு |
| ஏகாந்த சேவை | இரவு | 8-30 | | இரவு 7-00 | |

| ஆர்ஜித சேவைகள் | ரூ.பை |
|---|---|
| ஹாரத்தி | 0—50 |
| அஷ்டோத்ரநாம அர்ச்சனை | 1—00 |
| ஸகஸ்ரநாம அர்ச்சனை | 5—00 |
| அபிஷேக தரிசனம் | 5—00 |
| குங்கும அர்ச்சனை | 1—00 |

பிரார்த்தனையின் விளைவாகச் செடிகளது உயரத்தைப் பொறுத்த மட்டில் ஐம்பது சதவிகித வளர்ச்சியும், இலைகளின் அடர்த்தியைப் பொறுத்த மட்டில் 30 முதல் 40 சத விகித அதிக வளர்ச்சியும் காணப்படுகின்றனவாம். செடிகளது வளர்ச்சி மட்டுமல்லாது, செடிகளுக்கு ஏற்படும் நோய்களையும் பிரார்த்தனையின் மூலம் தீர்க்க முடியும் என்பது சோதனைகள் மூலம் நிரூபித்துக் காட்டப்பட்டிருக்கிறது. எந்தவிதக் கிருமி நாசினி மருந்தையும் பயன்படுத்தாமல், நோய் வாய்ப்பட்ட செடிகள் மூன்று வாரங்களுக்குள் பிரார்த்தனையினால் மட்டுமே பூரண குணம் கண்டுவிட்டனவாம்.

இது போன்ற ஆராய்ச்சிகளில் ஈடுபட்டிருக்கும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தாவரவியல் பேராசிரியர் டாக்டர் டி. ஸி. என். சிங் என்பவர் தாவரங்களிடத்தில் பிரார்த்தனையால் எவ்விதம் மாற்றங்கள் ஏற்படுகின்றன என்பது பற்றிக் கூறுகையில்,

“வளரும் தாவரங்களின் கிளைகளின் நுனிகளில் செல் வளர்ச்சி விரைவாக நடக்கிறது. செல்களின் சுவர்கள் மிகவும் லேசானவையாதலால் திரவ நிலையிலிருக்கும் புரோட்டோப் பிளாசம் கிளை நுனிப் பகுதிகளில் அதிகச் செயலாற்றல் உள்ளவையாய் இருக்கின்றன. மௌனப் பிரார்த்தனையின்போது உண்டாக்கப்படும் எண்ண அலைகள் இந்தப் புரோட்டோப் பிளாசத்தைப் பாதிக்கின்றன. உஷ்ணம், காற்று, ஈரப்பசை, ஒளி போன்ற பல்வேறு புறச் சூழ்நிலைகளால் இந்தப் புரோட்டோப் பிளாசம் மாறுதலுக்குள்ளாவது போன்று, எண்ண அலைகளாலும் அவை மாற்றத்திற்குள்ளாகின்றன. எனவே மௌனப் பிரார்த்தனை எண்ண அலைகளின் வடிவில் புரோட்டோப் பிளாசத்தைப் பாதித்து வளர்ச்சியை உண்டு பண்ணுகின்றன என்பதில்

எந்தவித ஆச்சரியமும் இல்லை,'' என்று கூறுகின்றார்.

நல்ல எண்ணங்களால் பயிர்கள் வளர்ச்சியடைவதைப் போன்று எதிரிடையான தீய எண்ணங்கள் அவற்றின் வளர்ச்சியைத் தடுத்து, அவற்றைச் சாகடித்து விடுகின்றன என்பதும் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. என்னே எண்ணங்களின் வலிவு!

பயிர்களிடத்தில் பிரார்த்தனையினால் இத்தனை மாற்றங்கள் ஏற்படுகின்றன என்பதை இவ்வளவு விரிவாக இங்கே விளக்கியதற்குக் காரணம், மனிதர்களிடத்துப் பிரார்த்தனையின் மூலமாக எத்தகைய அற்புதமான நன்மைகளை நம்மால் செய்ய முடியும் என்பதை வலியுறுத்தத்தான். சான்றோர்களது வாழ்விலும் சரி, சாதாரண நம் போன்றோரது வாழ்விலும் சரி பிரார்த்தனையின் மூலம் வியத்தகு விளைவுகளை உண்டாக்க முடியும் என்பதற்குச் சான்றுகள் அநேகம் உள்ளன. மகான்கள் தங்களது நல்லெண்ணங்களாலேயே மக்களுக்கு நன்மை செய்ய முடியும், செய்திருக்கின்றார்கள் என்பதற்குச் சான்றுகள் அநேகம் உள்ளன. மகான்கள் தங்களது நல்லெண்ணங்களாலேயே மக்களுக்கு நன்மை செய்ய முடியும், செய்திருக்கின்றார்கள், என்பதற்கு ஸ்ரீ சுவாமி சிவானந்தரது வாழ்வில் நிகழ்ந்த அற்புதங்கள் பலவற்றில் ஒன்றை இங்கே குறிப்பிடுவது பொருந்தும்.

சிவானந்தாச்சிரமத்தில் சத்சங்கம் நடந்து கொண்டிருக்கிறது. குருதேவர் வழக்கம் போன்று தமது சாய்வு நாற்காலியில் அமர்ந்து கொண்டு சத்சங்கத்தில் பங்கு கொண்டிருக்கிறார். அனைவரும் நாம பஜனையில் ஈடுபட்டிருக்கின்றனர். அப்பொழுது நடுத்தர வயதான பெண்மணி ஒருத்தி கையிலே தந்தி ஒன்றுடன், கண்களில் நீர் மல்க ஓடோடியும் வந்து குருதேவரின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து ஒன்றும் சொல்லத் தோன்றாதவளாய்ப் பிரம்மிப்புடன் நிற்கின்றாள். அவளது தோற்றம் அங்குள்ளவரிடத்தில் பாசத்தையும், பரிவையும் உண்டாக்குகிறது. குருதேவர் அவளை நோக்கி, ''என்ன விஷயம்?'' என்று கேட்கும் தோரணையில் நிமிர்ந்து பார்க்கிறார்.

'சுவாமிஜி! நான் எப்படிச் சொல்லுவேன்? கல்கத்தாவில் எனது கணவர் மரணப்படுக்கையில் இருக்கிறாராம். டாக்டர்கள் அனைவரும் இனி தங்களால் ஒன்றும் செய்ய இயலாது என்று அவரைக் கைவிட்டு விட்டனராம் சுவாமிஜி! நான் என்ன செய்வேன். நீங்கள்தான் கதி, சுவாமிஜி! என் கணவரது உயிர் இல்லை, இல்லை. என்னுடைய உயிர் உங்கள் கைகளில்தான் இருக்கிறது. எப்படியாவது அவரைக் காப்பாற்றுவது உங்கள் பொறுப்பு. காப்பாற்றுங்கள், சுவாமிஜி!'' என்று அழுது புலம்பினாள். அந்தக் காட்சியைக் கண்டு அங்குள்ள அனைவரது கண்களும் கலங்கின.

''சரி! உங்களது கணவர் பிழைத்து விடுவார், கவலைப் படாதீர்கள், அழாதீர்கள் மனதைத் தேற்றிக் கொள்ளுங்கள்,'' என்று ஆசுவாசப்படுத்தி விட்டு, அங்கு கூடியிருந்தோரை நோக்கி, 'இந்த அம்மாளுடைய கணவர் பூரண குணமடைய வேண்டும் என்று மனதில் எண்ணி நாம் அனைவரும் ஐந்து நிமிடங்கள் மிருத்யுஞ்ஜய மந்திர ஜபம் செய்வோம்'' என்று சொன்னார். உடனே அங்கிருந்த அனைவரும் அவ்வாறே குருதேவருடன் சேர்ந்து ம்ருத்யுஞ்ஜய மந்திர ஜபம் செய்தனர். என்ன ஆச்சரியம்! அவர்களது ஜபம் முடிந்த 2 மணி நேரத்திற்குப் பிறகு தந்திச் சேவகன் ஒருவன் அங்கு வந்து அந்த அம்மாளிடம் இன்னொரு தந்தியைக் கொடுக்க, ஏற்கனவே கலங்கியிருந்த அந்தப் பெண்மணியின் கலக்கம் இன்னும் அதிகமாயிற்று. என்ன விஷயமோ என்று கலக்கத்துடன் அந்தத் தந்தியைத் தான் பிரித்துப் பார்க்க விரும்பாது குருதேவரிடமே அதைக் கொடுத்தாள் அந்தப் பெண்மணி. குருதேவர் அதைப்பிரித்துப் பார்த்து விட்டு, புன்சிரிப்புடன் அந்த அம்மாளை நோக்கி 'உங்கள் கணவர் பூரண குணமடைந்து விட்டார்' என்று தந்தி சொல்கிறது என்றார். 'அப்படியா, சுவாமிஜி! எனது காதுகளை என்னால் நம்ப முடியவில்லையே! சுவாமிஜி! நீங்களே என் கண் கண்ட தெய்வம்'', என்று சொல்லிக் கண்களில் ஆனந்த பாஷ்யம் பெருக கீழே விழுந்து குரு தேவரை நமஸ்காரம் செய்தவர் எழுந்திருக்கச் சில நிமிடங்களாயிற்று.

பிரார்த்தனையினால் ஆகாதது ஒன்றுமில்லை. பிரார்த்தனையின் சக்தி மகத்தானது. மனத்தின் அடித்தளத்திலிருந்து அந்தரங்க சுத்தியோடு செய்யும் பிரார்த்தனை சூழ்நிலையைத் தூய்மையாக்குகிறது. பிரார்த்தனை செய்பவருக்கும், ஏனையோருக்கும் அது அளவற்ற ஆற்றல்களை அளிக்கிறது. நமக்குச் சோதனைகள் நேரிட்ட போதெல்லாம், மனம் தடுமாறிய பொழுதெல்லாம், பிரார்த்தனைதான் தமக்கு உறுதுணையாயிருந்தது என்கிறார் அண்ணல் காந்திஜி. 'ஸர்வேஷாம் ஸ்வஸ்திர் பவது, ஸர்வேஷாம் சாந்திர் பவது, ஸர்வேஷாம் மங்களம் பவது'— அதாவது உலகோர் அனைவருக்கும் சுபிட்சமும், அமைதியும், நல்வாழ்வும் உண்டாகட்டும் என்பதுவே நமது பிரார்த்தனையாய் அமைய வேண்டும். பிறரது நலத்தை நாம் வேண்டினால் நாமும் நலமடைவோம். தினமும் ஐந்து அல்லது பத்து நிமிடங்கள் காலையிலும், மாலையிலும் பிரார்த்தனை செய்யும் பழக்கம் நமக்கும், நமது குடும்பத்ினருக்கும், அனைவருக்கும் நலம் பயக்க வல்லது. பிரார்த்தனை செய்வோம்; பலன் அடைவோம்!!

★

# ★ தெய்வீகப் புள்ளரசன் சம்பாதி ★

உயிரின் இயல்புகளும், வாழ்வின் மர்மங்களும், துயர சோதனைகளால் தோய்ந்து உயர்வு நிலைகளில் திகழ்கின்றன. கருதிய கருமம் முடியாததால், மன வேதனை மிகுந்து இறந்து படத்துணிந்து, அங்கதன் தன் முடிவினைக் கூறவே, வானரர்கள் கண் கலங்கி நின்றனர். அரசகுமாரன் ஆதலால் எதிர் பேச அஞ்சி மரியாதையோடு அனைவரும் மருகி நின்ற பொழுது, ஜாம்பவன் என்ற முதியவர் புதிய துணிவோடு நல்ல போதனை புரிந்தார்.

'இன்னும் தேட வேண்டிய இடங்கள் எவ்வளவோ உள்ளன. காலம் கடந்தாலும் காரியம் கை கூடினால் தவணை தவறிவிட்டது என்று எவரும் நம்மை இகழ மாட்டார்கள். தேவியைக் கண்டால் இம்மையிலும் மறுமையிலும் என்றும் நமக்கு இன்பமே. போர் முகத்தில் இறந்தவர் வீர சுவர்க்கம் எய்துவது போல், கரும வீரர்களும் பெருமை மிகப் பெற்று பேரின்பமடைகின்றனர்' என்றான்.

'' நாடுதலே நலம்; இன்னும் நாடி அத்
தோடலர் குழலிதன் துயரில் சென்றமர்
வீடிய ஜடாயுவைப்போல் வீடுதல்
பாடவம் அல்லது பழியிற்றும்
என்றான்'' கம்பர்.

எல்லா விதத்திலும், திவ்ய மகிமையுடையவர் பருவமுதிர்ந்து படுகிழவராயிருந்தும் ஜடாயு செய்துள்ள அந்த அரிய வீரத்தை இன்றைய இளைஞர்கள் சிறிது சிந்திக்க வேண்டும். செய்து வாழ்; இன்றேல் செத்துமடி; என்பது கருமவீரர்களின் மந்திரம். எப்படியும் ஜானகிதேவியை கண்டே வரவேண்டும் என்று அனுமன் தேறுதல் கூறி, யாவரையும் ஊக்குவித்து, உள்ளத்துணிவுடன் நின்றார்.

இராம காரியமாய் இராவணனோடு போராடி மாண்டான் என ஜடாயுவின் வீரத்திறலைக் குறித்து அனுமன் வானரர்களுடன் பேசும் பொழுது, அந்த மலைச்சாரலில் தனியே தங்கியிருந்த சம்பாதி என்னும் கழுகரசன் அங்கே தாவிக்குதித்து வந்தான். அந்த பெரிய பறவையை எங்ஙனம் வருகின்றது என்பதைக் கம்பர் வருணிக்கிறார்.

'' உழுங்கதிர் மணியணி உமிழ மின்னினான் ;
மழுங்கிய நெடுங்கணின் வழங்கு மாரியான்:
புழுங்குவான் அழுங்கினான் புடவி மீதினில்
முழங்கிவந்து இழிவதோர் முகிலும் போய்கின்றான்.

---

*திரு. டி. வி. ராஜன் - மதுரை.*

---

வள்ளியும் மரங்களும் மலையும் மண்ணுறத்
தெள்ளுநுண் பொடிபடக் கடிது செல்கின்றான்
தள்ளுவன் கால் பொரத் தாணியில் தவழ்
வெள்ளியம் பெருமலை பொருவு மேனியான்.''

— சம்பாதிப் படலம்.

சம்பாதியின் உருவக் கோலத்தையும் உள்ளத்தின் இயல்புகளையும் பரிதாப நிலைகளையும் தெளிவாகக் காட்டப்படுகின்றன. அவலக் காட்சிகள் கவலை மணம் வீசிக்காண்கின்றன. பிறவி வாஞ்சை பெருகி மிளிர்கின்றது. ஜடாயுவின் உடன் பிறந்த அண்ணன் ஆகையால், அவன் போரில் மாண்டு போனான் என்ற சொல்லைக் கேட்டதும், உள்ளம் துடித்து, உயிர்ப் பதைத்து வந்தான். கண்ணீர் ஆறாய்ப் பெருக, என் தம்பியைக் கொல்ல வையகத்தில் ஒருவருமில்லையே என்று கூறி ஆராத்துயரடைந்தான். பறவையுருவும் தெய்வீக அறிவும் மருவியுள்ள சம்பாதி உடன் பிறப்பின் பாசத்தால் உள்ளம் கருகி உருகுகிறான். வெள்ளை நிறமும் வீரத்திறமும் பேரறிவும் பெருகிவுள்ளவன் ஆதலால் ''வெள்ளியப் பெருமலை பொருவும் மேனியான்'' என்று கம்பநாட்டாழ்வார் அருளுகின்றார். துள்ளித்தாவி அவர் துடித்து வந்தார் என்கிறார், மேலும் பறவையின் அவலநிலையை விளக்க.

அதி விசித்திரமான பெரிய கழுகு திடீரென்று அருகில் வரவே, வானரங்கள் திகிலடைந்து ஒதுங்கின. அனுமன் அஞ்சாமல் எதிர் நின்று, 'நீ யார்?' என்று அதட்டிக் கேட்டான். சம்பாதியோ, நெஞ்சம் உருகி, 'ஐயா! ஜடாயுவை யாரோ கொன்றார் என்று சொன்னீர்களே, அவன் யார்? எங்கே கொலை நடந்தது?' என்று கண்ணீர் மல்கி வினவினான். அவனுடைய பரிவான நிலையைக் கண்டு அனுமன் அன்பு மிகக்கொண்டு ''ஐயா! நீங்கள் யார் என்ற உண்மையைச் சொல்லுங்கள். பின்பு நான் நிகழ்ந்ததைக் கூறுகிறேன்'' என்று சொன்னான்.

சம்பாதி, ''தாங்கள் நன்றாகக் கேளுங்கள். நான் ஜடாயுவின் அண்ணன். என் பெயர் சம்பாதி. என் அருமைத் தம்பி இறந்தான் என்று நீங்கள் பேசக் கேட்டு உள்ளம் துடித்து வந்தேன். நடந்ததைத் தெளிவாகச் சொல்லுங்கள்'' என்றான். அனுமன் விஸ்தாரமாகக் கூறிய பின், இலங்கை வேந்தன் இராவணனுடன் போராடி மாண்டான் என்று கூறவே சம்பாதி துயரம் தாங்க மாட்டாமல் கீழே விழுந்தான். கண்ணீர் சொரிந்து கதறி அழுதான். யாராலும் வெல்ல முடியாத பெருவலியோன் என ஒரு நிலையடைந்திருந்தும் மாய அரக்கனால் மாய நேர்ந்ததே! மனு குலத்தில் உதித்த தசரத சக்கரவர்த்தி உன்னை உரிமைத்துணை ஆக உவந்து கொண்டாடி உயிர் நட்புக் கொண்டிருந்தாரே. கழுகு அரசனாக இருந்தாலும் வீரத்திலகமாய் புகழ் வாங்கி வந்தாயே'' என்று புலம்பினான்.

(28-ம் பக்கம் பார்க்க)

# குறுக்கெழுத்துப் புதிர்

திரு. எஸ். ஜி. சேஷகிரி-கோவை.




| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| X | 1 | 2 | | | X | 3 | | 4 |
| X | 5 | | | X | 6 | | | |
| 7 | | X | X | | | | X | |
| | X | 9 | | X | | X | 10 | |
| 11 | | | X | 12 | | 13 | | X |
| 14 | | | 15 | | X | | X | 16 |
| | X | X | | X | 17 | | X | |
| X | 18 | | X | 19 | | X | 20 | |
| 21 | | | | X | 22 | | | |

## குறிப்புகள்

### இடமிருந்து வலம்

1. மாவலிபால் மூவடி மண் கேட்டு முழுதுலகமளந்த சான்பிள்ளை.
3. உருவமற்றது
5. செங்கமலம்
6. ஒரு மணப்பொருள்
7. ஒரு கர்னாடக ராகம்; ஒரு நாகரிக பானம்
8. ———தீயினும் அஞ்சத் தக்கவை.
9. பதியினைப் போல்———அநாதி.
10. ———கடன் அடியேனையுந் தாங்குதல்
11. ———கவில் வலம்புரி சிறப்பு (மறைந்திருக்கு)
12. அபிராமி பட்டர்———தாசர்.
14. கடமை
17. வீரன்
18. கண்ணன்———ஐவருக்காகவா? போருக்காகவா?
19. ———கலைகள் அறுபத்தினான்கு
20. ஆசையாகிய விலங்கு துகளாகிய பின் ———அநுபூதி பிறந்ததுவே.
21. உள்ளுவது எல்லாம்———உள்ளல்
22. ருக்மிணி கண்ணனுக்கு எழுதிய ———இலக்கிய நயமுடையது (மேலாகப் பார்க்கக்கூடாது)

### மேலிருந்து கீழ்

1. ———கணபதிம் பஜே என்று கச்சேரி ஆரம்பிப்பார்கள்.
2. என்னுடையது
3. முருகனிடம்———கேட்டுப் பெற்றது சுட்ட பழம்.
4. ———தூது நாற்றெருவருக்காக.
6. அரங்கன்———யோக நித்திரை ஆகும்.
7. மாறுபட்ட நம்———மாற்றப்பட ஆண்டவனிடம் பிரார்த்திக்க வேண்டும்.
10. பொருத்தம்.
12. ஐந்து குடில் வரைக் கேட்டும் மானமில்லை எனில்———போர் வேண்டுவது என்பது கண்ணன் தூதின் முடிவு.
13. உன் கையிற்———உனக்கே அடைக்கலம்.
15. ———நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிவு உடையவன் எம்பெருமான்.
16. பாரதி———ஒரு வீர காவியத்தலைவி.
17. நிலைபேறு; என்றும் இது பொய்யடா என்கிறார் சித்தர்.
18. கங்கையிற்———யமுனை, காவிரி என்று பாடியுள்ளனர்.

(விடைகளுக்கு அடுத்தப் பக்கம் பார்க்க)

# கடல் மல்லைக் காவலன்

திரு இரா. ஸ்ரீநிவாஸ தேசிகன்,
விழுப்புரம்.

ஆசிரியர் தேசிக தாஸன் மாலை ஸந்த்யாவந்தனத்தை முடித்துக் கொண்டு விசுப்பலகையில் உட்கார்ந்து ஆழ்வார் பாசுரங்களைச் சொல்லிக் கொண்டிருந்தார். அவர் இசைத்துக் கொண்டிருந்த பாசுரம்:

அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தையிடுதிரியா-நன்புருகி
ஞானச்சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ் புரிந்த நான்.

அவ்வேளையில் அங்கு வந்த அவருடைய பேத்தி மிதிலைச் செல்வி அவர் மடிமீது அமர்ந்து பாசுரத்தைக் கவனமாகக் கேட்டாள். அவள் அப்பொழுதுதான் தன் தாய் தந்தையுடன் பெருமாள் கோவிலுக்குச் சென்றுதிரும்பியிருந்தாள். அவளுக்கு அகவை எட்டு. மூன்றும் வகுப்பில் படித்துக் கொண்டிருக்கிறுள். பாசுரத்தைக் கேட்ட அந்தச் சிறுமி தன் தாத்தாவிடம் கேள்விகள் தொடர்ந்தாற்போல் கேட்க ஆரம்பித்தாள். தாத்தா! ஞானத்தமிழ் புரிந்தவர் யார்? ஞானச் சுடர் விளக்கேற்றியவர் யார்? அன்பே தகளியா என்றால் என்ன?

பெரியவர் பேத்தியின் வினக்களைக் கேட்டு மனத்திற்குள் மகிழ்ச்சியுடன் பொறுமையாக பதிலளித்தார் - ஞானத்தமிழ் புரிந்தவரும், ஞானச் சுடர் விளக்கேற்றிய வரும் முதலாழ்வார்கள் மூவரில் நடுவரான பூதத்தாழ்வாராவார். அன்பே தகளியா என்றால் தன் உள்ளத்துள் எம்பெருமானிடத்து ஊறும் அன்பே விளக்கு என்று பொருள்.

தாத்தா தன் பேத்திக்கு அடிக்கடி ஆழ்வார்கள் கதைகளைச் சொல்லி வருவார். இப்பொழுது பேத்தி தாத்தாவிடம் பூதத்தாரின் முழுக் கதையையும் சொல்லுமாறு வேண்டினுள். பெரியவர் பாசுரம் இசைப்பதை நிறுத்திவிட்டு ஆழ்வாரின் வரலாற்றைச் சொல்லத் தொடங்கினுர். பேத்தியும் மிகவும் கவனமாகக் கேட்கத் தொடங்கினுள்.

நம் தமிழ் நாட்டில் தொண்டை மண்டலப் பகுதியில் மாமல்லபுரம் என்ற ஊர் கடற்கரைக் கருகில் இருக்கிறது. அவ்வூர் செங்கை மாவட்டத்தில் உள்ளது. பல்லவர்கள், தங்கள் ஆட்சிக் காலத்தில் இவ்வூரைத் துறைமுகப் பட்டணமாகக் கொண்டிருந்தனர். இப்பொழுது அவ்வூரின் பெயர் மஹாபலிபுரம் என்பதாகும். வைணவர்கள் அவ்வூரை, திருக்கடல் மல்லை என வழங்குகின்றனர். அவ்வூரில் உள்ள சிற்பக் காட்சிகளைக் காண நாள் தோறும் பயணிகள் செல்லுகின்றனர். அவ்வூரில் தலசயனப் பெருமாள் கோவிலும், குகைக் கோவிலில் ஞானப்பிரான் ஸந்நிதியும் இருக்கின்றன.

இத்துணைச் சிறப்புமிகுந்த அந்த ஊரில் பூதத்தாழ்வார் குருக்கத்திப் பூவில் அவதரித்தார்.

பேத்தி இடையே "இவ்வாழ்வார் பூதம் போல் இருந்தாரா? ஏன் இவருக்கு இப்பெயர் வந்தது?" என்று வினவினுள். பெரியவர், "'பூத' என்னும் சொல் வடமொழிச் சொல். அச்சொல்லுக்குப் பொருள் 'இருப்பைப் பெற்ற' என்பதாகும். எம்பெருமான் இருப்பை முழு அளவில் உணர்ந்து பக்தியிலீடுபட்டு வந்தாராதலால் இம்முனிவருக்கு 'பூதத்தார்' என்று பெயர் வழங்குகிறது" என்று பேத்திக்கு ஏற்பட்ட ஐயத்தைப் போக்கி கதையைத் தொடர்ந்தார்.

இம்மஹாமுனிவர் திருமாலுறையும் திவ்யத்தலங்கள் தோறும் சென்று வணங்கி வழிபட்டு வருவார். திருக்கோவலூரில் காட்சிதரும் திருவிக்கிரமப் பெருமாளைத் தரிசிக்க அவ்வூருக்குச் சென்றுர். அங்கு ஓர் நாளிரவில் மிருகண்டு முனிவரின் ஆச்ரமத்தின் இடைகழியில் மற்ற இரு முனிவர்களுடன் சேர்ந்து நின்று கொண்டு திருவுக்கும் திருவாகிய திருமாலை உள்ளத்தில் துதித்துக் கொண்டிருந்தார். அந்நிலையில் திருமாதுவாழ் மார்பன் மூன்று முனிவர்களுக்கும் காட்சி அளித்தான். எம்பெருமானைச்சேவித்த இவ்வாழ்வார் பக்திப் பரவசம் மேலிட "அன்பே தகளியா" எனத்தொடங்கும் 100 பாடல்களைக் கொண்ட இரண்டாம் திருவந்தாதி என்னும் பிரபந்தத்தை அருளிச் செய்தார். நம் தூப்புல் வள்ளல் இவ்வாழ்வாரை தாம் அருளிய பிரபந்த ஸாரத்தில் "கடல் மல்லைக் காவலனே" என்று போற்றுகின்றுர். மேலும் முதலாழ்வார் மூவரையும் "பாட்டுக்குரிய பழையவர்" என்று அதிகார ஸங்கிரகம் என்னும் பிரபந்தத்தில் குறிப்பிட்டுள்ளார்.

கதையை முழுவதும் கேட்ட செல்வி, "அந்தாதி என்றால் என்ன தாத்தா" என வினவினுள்.

ஒவ்வொரு பாட்டின் கடைச் சொல் அடுத்த பாட்டின் முதலில் வருவது அந்தாதியாகும் என்று பெரியவர் பொருள் கூறினுர். உடனே சிறுமி, 'தாத்தா, நான் இப்பொழுது கேட்ட ஆழ்வார் கதையை அம்மாவுக்குச் சொல்லப் போகிறேன்' என்று கூறிக்கொண்டே எழுந்து தாய் இருக்கும் இடத்திற்கு விரைந்தாள். ★

---

### குறுக்கெழுத்துப் புதிர் விடைகள்

இடமிருந்து வலம்

| | |
|---|---|
| 1. வாமனன் | 12. அம்பிகை |
| 3. அருவி | 14. கடப்பாடு |
| 5. தாமரை | 17. காலை |
| 6. சவ்வாது | 18. தூது |
| 7. காபி | 19. ஆய |
| 8. நியவை | 20. பேசா |
| 9. பசு | 21. உயர்வு |
| 10. தன் | 22. மதகிலி |
| 11. ங்குச (சங்கு) | (லிகிதம்) |

மேலிருந்து கீழ்.

| | |
|---|---|
| 1. வாதாபி | 12. அடு |
| 2. மம | 13. பிள்ளை |
| 3. அவ்வை | 15. பால் |
| 4. விதுரன் | 16. பாஞ்சாலி |
| 6. சயனம் | 17. காயம் |
| 7. காமங்கள் | 18. தூய |
| 10. தகை | |

# வைணவ வினா - விடை

வித்வான் தஞ்சை ஸ்ரீ. உ. வே. என். எஸ். தாதாசார்யர்.

**புருஷகாரம் என்றால் என்ன?**

உலக இயலில் இச்சொல்லுக்குப் பொருள் கூறினால், ஆளாக்கி நிறுத்துதல் "சிபாரிசு செய்தல்" என்பதாகும். திருமகளை முன்னிட்டு திருமாலை அடைந்தால்தான் அவன் நம்மை ஆளாக்கி வைக்க நமக்கு இறைவன் அருள் கிட்டும். இல்லாவிடில் நம்மை அவர் தம் கண் கொண்டும் நோக்கார். ஆகவே அவர் அருளைப் பெறத் திருமகளைப் புருஷகாரமாகக் கொண்டு அவரைச் சரண் புகுவதே நம் கடமை என்பர். ஸ்ரீய:பதி: திருமால் என்ற பெயர்களில் இவளே முன்னிருக்கிறாள்.

**விடத்தக்க வழிபாட்டு முறை என்ன?**

திருமகளை விட்டு நாரணனையோ, நாரணனை விட்டுத் திருமகளையோ தனிப்பட வழிபடுதல்கூடாது. திவ்விய தம்பதிகளான இருவரையும் ஒருங்கே வழிபட வேண்டும். ஒருங்கே சரண்புக வேண்டும். சூரியனும் கதிர்களும் போல் சந்திரனும் நிலாவும்போல் இவர்கள் ஒன்றியிருப்பவர்கள்.

**திருமால் அடியார்களைக் காக்கும் விதம் என்ன?**

அன்னையாய், அத்தனாய் நின்று நாம் எந்தவழியில் வழிபடுகிறோமோ, அந்த வழியில் நமக்காக நம் நிலைக்கு இறங்கி வந்து நம்முடன் கலந்து நின்று காப்பான். மேக நீர், கடைசியில் கடல் நீருடன் கலப்பது போல் எந்த முறை எவ்வடிவில் வழிபட்டாலும் கடைசியில் திருமாலையே அடையும். இருப்பினும் முறைப்படி திருமாலை நேரில் வழிபடுவதே சிறந்த வழியாகும்.

**அவதாரம் என்றால் என்ன?**

தந்நிலையிலிருந்து அடியார்களுக்காக இறங்கி வந்தருளுதல். அந்த அந்த நிலையில் மாறுபாடின்றி கலந்து இருப்பதாகும். இதுவே இவர் சிறப்புக்குக் காரணம். இவரது பிறப்பை நமது பிறப்புப் போல் கருதக்கூடாது. தன்னிச்சையில் இவர் தோன்றுகிறார். நாம் அருவினையால் பிறவியில் தள்ளப்படுகிறோம். அவதாரம் என்பதற்குத் தாழ வருதல் எனப்பொருள். இந்நிலையை சிறைக் கைதியையும் சிறை அதிகாரியையும் கண்டு அறியலாம்.

**திருமாலின் நிலைகள் என்ன?**

1. பரம்: வைகுந்தத்தில் இருக்கும் நிலை. ஸ்ரீமந் நாராயணன் பரவாசுதேவன் வடிவமாகும்.
2. வியூகம்: வெள்ளை அம் தீவில் அடியார்களின் குறைகளைக் கேட்கவும், படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூன்று செயல்களை நடத்தவும், சங்கர்ஷணன், பிரத்யும்னன், அநிருத்தன் வ்யூஹவாசுதேவன் என்ற திருப்பெயர்களுடன் நான்காய் இருத்தல். பாலாழியில் பள்ளி கொண்ட நிலை.
3. விபவம்—ராமன், கிருஷ்ணன் என்ற அவதார நிலை.
4. அந்தர்யாமித்வம்—மனிதன் உள்ளத்தில் நிறைந்த திருக்குணங்களுடன் எழுந்தருளி இருந்து ஜீவனை நடத்தும் நிலை. உள்ளிருந்து கடாவி மக்களைச் செலுத்தி அதனால் கடவுளானார்.
5. அருச்சை—கோயில்களிலும் கிருகங்களிலும் பிம்ப வடிவத்தில் இருக்கும் நிலை. சாளக்கிராமத்தையும் இப்பகுதியில் சேர்ப்பார்கள்.

**அருச்சை வடிவில் உள்ள இறைவனை எவ்வாறு வணங்க வேண்டும்?**

பொதுவாகக் கோயிலில் உள்ள பெருமான்களைத் திருவடி தொடங்கித் திருமுடிவரை கண்ணும் கருத்துமின்றைய தரிசிக்கவேண்டும். ஊஞ்சல், கருவறை, திருத்தேர் இவைகளில் திருமால் உருவத்தை தரிசிப்பது சிறந்த பயனைக் கொடுக்கும். தெப்பத்தில் தரிசிப்பது அளவற்ற பயனைத் தரும். கோயிலில் உள்ள பிம்பத்தை திருமாலாகவே நினைக்கவேண்டுமேயன்றி காட்சி பொருளாகவும், செம்பு-கல் என்ற கருத்திலும் நோக்கக் கூடாது. இதற்கு சுபாச்ரயம் எனவும் பெயர்.

**பிரதிஷ்டை என்றால் என்ன?**

பெரியோர்களைக்கொண்டு குறிப்பிட்ட மந்திரங்களின் மூலம் குறிப்பிட்ட உருவத்தில், குறிப்பிட்ட கடவுளை நிலைத்து எழுந்தருளச் செய்வது. இதனை ஸம்ப்ரோக்ஷணம் என்பர்.

(24-ம் பக்கம் பார்க்க,




# ஸௌமித்திரை

திரு. வி. ரங்கஸ்வாமி ஐயங்கார்,
திருச்சானூர்.

வனவாஸத்திற்கு புறப்படும் பொழுது இராமன் கௌஸல்யையை வணங்கினவுடன் லக்ஷ்மணனும் அவளுக்கு வணங்கி தன் தாய் ஸௌமித்திரையின் திருவடிகளைப் பிடித்துக்கொண்டு அவளுக்கு வணங்கியதும்,

தம் வந்தமானம் ருததிமாதா
ஸௌமித்ரிமப்ரவீத் ।
ஹிதகாமாமஹாபாஹும்
மூர்த்ன்யுபாக்ராயலக்ஷ்மணம் ॥

அவள், வருந்தி வணங்கும் லக்ஷ்மணனை உச்சி மோந்து அவனுக்கு நன்மை யுண்டாக அவனிடம்,

ஸ்ருஷ்டஸ்த்வம் வனவாஸாய
ஸ்வனுரக்தஸ்ஸுஹ்ருஜ்ஜனே ।
ராமே ப்ரமாதம் மாகார்ஷீ:
புத்ரப்ராதரி கச்சதி ॥

'மகனே! உலக நன்மைக்காக கௌஸல்யை எவ்வாறு இராமனைப் பெற்றாளோ அவ்வாறே நானும் தயாளுவாகிய இராமனிடம் அன்புள்ள உன்னை அவனுடன் வனம் சென்று அவனுக்குப் பணிவிடைச் செய்யவே பெற்றேன். இதற்காகவே தேவன் உன்னைப் பிறப்பித்தான். காட்டில் இராமனுடன் போகும் நீ அவன் ஸீதையுடன் கவனமற்றிருந்தாலும் மிக்க கவனத்துடன் அவனைக் காத்திடல்வேண்டும். 'ஏன் நான் காட்டிற்கு போக வேண்டுமென்பாயோ'

வ்யஸனீவா ஸம்ருத்தோ வா கதிரேஷ
தவானக ।
ஏஷலோகே ஸதாம் தர்மோ
யஜ்ஜ்யேஷ்ட வசகோ பவேத் ॥

உனக்கவனே யஜமானன். நீ அவனுடைய தாஸனுவாய். ஆதலால் அவன் எத்தகைய தாழ்ந்த நிலையிலிருந்தாலும், உயர்ந்த நிலையில் இருந்தாலும், உனக்கவன்தான் பரம கதி என்றறிவாயாக. இளையவன் மூத்தவனிடமிருப்பதே நல்லோரின் முறை.

இதம் ஹி வ்ருத்தமுசிதம்
குலஸ்யாஸ்ய ஸனாதனம் ।
தானம் தீக்ஷாச யஜ்ஞேஷு தனுத்யாகோ
ம்ருதேஷு ச ॥

இம்முறையைப் பின்பற்றுவதும், தானம் செய்வதும், யாகதீக்ஷைக் கொள்வதும், போரில் உயிரையாவது விடுவதும் உன் உத்தம வம்சத்தில் பண்டைக் காலத்திய வழக்கமென்றறிந்துகொள்''

லக்ஷ்மணம் த்வேவ முக்த்வா
ஸாஸம்ஸித்தம் ப்ரியராகவம் ।
ஸுமித்ரா கச்ச கச்சேதிபுன:
புனருவாசதம் ॥

என்று கூறி, இராமனிடத்திலேயே மனமுள்ளவனாய் அவனுடன் வனவாஸம் செய்ய எண்ணியிருப்பவனான லக்ஷ்மணனை 'செல்வாயாக, செல்வாயாக' என்று பலமுறைக் கூறி, அவனுருக்கால் தன்னையாவது, தசரதனையாவது, அயோத்தியையாவது நினைத்து வருந்துவானோ என்றெண்ணி,

ராமம் தசரதம் வித்தி மாம்
வித்தி ஜனகாத்மஜாம் ।
அயோத்யாமடவீம் வித்தி
கச்ச தாத யதா ஸுகம் ॥

''இராமனே தசரதனென்றும், ஸீதையை நானென்றும், காட்டை அயோத்தி என்றும் நினைத்துக்கொள்'' என்று கூறுகிறாள். உலகில் மூத்தாளும், இளையாளும் எவ்விதம் நடந்து கொள்வர் என்பது யாரும் அறிந்ததே. ஆனால் ஸுமித்திரை அத்தகையவளில்லை. அவள் மகத அரசனின் புதல்வி. அவள் பெயரே நல் நட்பைக் காட்டுகிறது. அவளுடைய நற்குணத்தை சற்றே ஆராய்வோம். அவளுக்கு கௌஸல்யையிடத்தில் மிக்க அன்பும் மதிப்புமுண்டு. பொறாமையற்றவர்களில் சிறந்தவள். உயிர் போன்ற இரண்டு புதல்வர்களையும் தாஸர்களாய் இருக்க நியமித்து இதனாலெவ்வித மனக்கலக்கமும் இல்லாமலிருப்பதே அவளுடைய மனத்தூய்மையை விளக்குகிறது. கௌசல்யையாயினும் இராமன் வனவாஸம் செய்வதில் வருத்தத்தை அறிவித்தாள். ஆனால் ஸுமித்திரை இராமனுடைய பரத்துவத்தை நன்கறிந்த மாபெரும் ஞானியாவாள். 'அஹம் வேத்மி' என்று விச்வாமித்திரர் இராமனை பகவான் என்று தானும், வஸிஷ்டரைப் போன்ற முனிவர்களும் அறிந்ததாகக் கூறியுள்ளார். அத்தகைய ஞானிகள் பெண்களிலுமுள்ளார்என்று ஸுமித்திரை முதலானோர்களால் தெரிகிறது. 'ஸ்ருஷ்டஸ்த்வம் வனவாஸாய' என்பதில் லக்ஷ்மணன் ஆதிசேஷனுடைய அம்சமென்றவளறிந்ததாகக் கூறலாம். நித்ய விபூதியில் (வைகுந்தத்தில்) சிங்காஸனமாயும், படுக்கையாயும், குடையாயும் ஸ்ரீமந் நாராயணனுக்கு நித்ய கைங்கர்யம் செய்து வரும் நீ, இவ்வவதாரத்திலும் இராமனுக்கு

கைங்கர்யம் செய்வதற்காக அவனுடன் காட்டுக்குச் செல்லும்படி நியமித்தான் என்று விளங்குகிறது. "நீ நல்லோரிடம் அன்பு பாராட்டுபவன். அவர்களில் மிக்கச் சிறந்தவனுன இராமனிடம் உன் அன்பைக் காட்ட வேண்டிய சமயமிது. உன் மனைவியை, என்னை, தந்தையை மற்றும் எல்லா போகபாக்யங்களையிந்துறந்து இராமனுடைய கைங்கர்யத்தில் ஈடுபடுவதே அழிவற்ற ஐச்வர்யம் என்றெண்ணி உன் பிறவியைப் பயனுள்ளதாகச் செய்துகொள். இராமன் அரசாண்டாலும், வனவாஸம் செய்தாலும் அவனே உனக்கு பரமகதியாவான். உனக்கே அல்ல, உலகனைத்துக்கும் பரமகதியவனே. உன்னைக் கொண்டவனுக்கு கைங்கர்யம் செய்வித்து நானும் என் வாழ்க்கையை பயனுள்ளதாகச் செய்து கொள்கிறேன். ஸோபாதிக தாய் தந்தைகளான நானும் தசரதனும் உனக்கு செய்யக் கூடியவையாவுமில்லை. ஆதலால் நிருபாதிக தாய் தந்தைகளாகிற ஸீதையையும், இராமனையுமே வணங்கி நல்வழியடைவாயாக. இராமனிருப்பிடமே அயோத்தி. அவனில்லாததால் அயோத்தி காடென்றே கூறலாம்". இவ்வாறு லக்ஷ்மணனுக்கு தத்துவம், ஹிதம், புருஷார்தங்களை உபதேசித்த ஸுமித்திரை லக்ஷ்மணனுக்கு ஆசார்ய கார்யத்தையும் செய்தாள் என்னலாம்.

> க்ருத க்ருத்யாஹி வைதேஹீ சாயே
> வானுகதா பதிம் ।
> நஜஹாதி ரதாதர்மே மேருமர்க-
> ப்ரபா யதா ॥

ஸீதை 'கர்மணைவஹி ஸம்ஸித்தி மாஸ்திதா ஜன காதய:' என்றபடி தருமமே உருவெடுத்த ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதை தருமத்தை நடத்துவதில் ஊக்கமுள்ளவளாய் ஸூர்ய கிரணங்கள் மேரு பருவதத்தை விடாமல் சுற்றி வருவது போல் கணவனைவிட்டு பிரியாமல் நிழலைப்போல் அவனைப் பின் தொடர்ந்தாள். 'விஷ்ணோரேவான பாயினீ' என்றபடி லக்ஷ்மி விஷ்ணுவை ஒரு கணமாயினும்விட்டுப் பிரியாதது போல் ஸீதை கணவனுடன் துன்பங்களுக்கெல்லாம் ஸம்மதித்து காட்டிற்குச் சென்றதால் அவள் லக்ஷ்மி என்றும், இராமனே விஷ்ணுவென்றும் ஸுமித்திரை நினைக்கிறாள்.

> விலபந்தீம் ததா தாந்து கௌஸல்
> யாம் ப்ரமதோத்தமாம் ।
> இதம் தர்மே ஸ்திதா தர்ம்யம்
> ஸுமித்ரா வாக்ய மப்ரவீத் ॥

(வனம் சென்ற இராமனைக்குறித்து வருந்தும் கௌஸல்யையைக் கண்டு ஸுமித்திரை கூறுகிறாள்.)

> தவார்யே ஸத்குணைர்யுக்த: புத்ரஸ்ஸ
> புருஷோத்தம: ।
> கிம்தே விலபிதே நைவம் க்ருபணம்
> ருதிதேன வா ॥

"பூஜிக்கத் தக்கவளே! எல்லா நற்குணங்களமைந்த உன் புதல்வன் புருஷோத்தமன். அவனுக்காக நீ வருந்துவது உசிதமல்ல. (விசேஷார்தம்: உன் புதல்வன் வேதங்களால் புகழப்படும் நாராயணன். அவன் மற்றவரிடமில்லாத அளவற்ற கல்யாண குணங்கள் உள்ளவன். அவனை உலகத்தாரைப் போல் நினைத்து வருந்துவது உசிதமல்ல.)

> வ்யக்தம் ராமஸ்ய விஜ்ஞாய சௌசம்
> மாஹாத்ம்ய முத்தமம் ।
> நகாத்ரமம் சுபிஸ்ஸூர்யஸ் ஸந்தாப
> யிதுமர்ஹதி ॥

இராமனுடைய முக்கரண சுத்தியையும் உத்தமமான மகிமையும் நன்கறிந்து ஸூர்யன் தன் கிரணங்களால் அவனை தவிக்கச் செய்ய மாட்டான். (இதனுல் 'பீஷோ தேதி ஸூர்ய:' என்ற ச்ருதியின் பொருள் விளங்கும்.)

> சிவஸ்ஸர்வேஷு காலேஷு காநநேப்யோ விநிஸ் ஸ்ருத: ।
> ராகவம் யுக்த சீதோஷ்ணஸ்
> ஸேவிஷ்யதி ஸுகோऽநில: ॥

எக்காலத்திலும் அந்தந்த பொருட்களினின்றும் வீசுவதால் ஸமமான குளிர்ச்சியும் சூடுமுள்ள வாயுதேவன் காட்டினின்றும் வந்து இராமனுக்கு ஸுகமே அளிப்பான். (இந்த ச்லோகம் 'பீஷோஸ்மாத்வாத: பவதே,' என்கிற ச்ருதியின் பொருளை விளக்கும்.)

துன்புற்ற இராமன் இரவில் படுத்திருக்கும் பொழுது சந்திரன் குளிர்ந்த கிரணங்களால் தொடுவதால் அன்புள்ள தந்தை தழுவிக் கொள்வது போல் ஸுகமளிப்பான். (இதனுல் 'ஸூர்யா சந்த்ர மஸாதரு தௌ நிஷ்டத:' என்னும் ச்ருதியை விளக்கினதாகும்.)

> ஸூர்யஸ்யாபி பவேத் ஸூர்யோ ஹ்யக்
> னேரக்னி: ப்ரபோ: ப்ரபு: ।
> ச்ரிய: ச்ரீச்ச பவேதக்ர்யா கீர்தி:
> கீர்த்யா: க்ஷமா க்ஷமா ॥

உலகனைத்துக்கும் ஒளி தரும் ஸூர்யனுக்கும் ஒளியைத் தருபவனும், எல்லாவற்றையும் கொளுத்தும் அக்னியைக் கொளுத்துபவனும், பிரமனுக்கும், ருத்திரனுக்கும் பிறப்பிக்கவும் அழிக்கவும் அதிகாரமளித்தவனும் இருப்பான் இராமன். மேலும் செல்வத்திற்கு செல்வமாயும், புகழுக்கு புகழும், பொறுமைக்கு பொறுமையும், மற்றும் பிராணிகளனைத்துக்கும் இருப்பிடமாகிய பூமிக்கும் ஆதாரமானவன் அவன்.

> தைவதம் தைவதானும் ச பூதானும்
> பூதஸத்தம: ।
> தஸ்ய கே ஹ்யகுணாதேவி ராஷ்ட்ரே
> வாப்யதவா புரே ॥

தேவர்களின் காரியங்களனைத்தையும் வெற்றியுடன் முடித்து காப்பவனும், ஜீவகோடிக்கெல்லாம் காப்பவனும் உள்ளான் உன் புதல்வன். அத்தகையவனுக்கு நாட்டிலோ, பட்டணத்திலோ எவ்வித தீங்கும் நேரிடாது.'

இவ்வாறெல்லாம் சாஸ்திரங்களின் ஸாரத்தை பலவாறாக விளக்கிய ஸுமித்திரை பெரும் ஞானி என்றும், இராமனுடைய அவதார தத்துவத்தை நன்கறிந்தவளென்றும் கூறலாம்.

★

# ஸர்வேசுவரன் ஸர்வக்ஞன்



மகா விஷ்ணுவின் எத்தனையோ திருநாமங்களுள் சர்வேசுவரன் என்பது ஒன்று. ஆம், அவர் அனைத்துயிரையும் ஆள்பவர்; எனவே சர்வேசுவரன் ஆவார். இந்த நாமம் விஷ்ணு ஸஹஸ்ர நாம வரிசையில் 96-வது இடம் வகிக்கும் திருப்பெயர்.

अजः सर्वेश्वरः सिद्धः सिद्धिः सर्वादिरच्युतः ।
वृषाकपिरमेयात्मा सर्वयोगविनिःसृतः ॥

அஜ: ஸர்வேஸ்வர: ஸித்த:
ஸித்தி: ஸர்வாதிரச்யுத: ।
வ்ருஷாகபி ரமேயாத்மா ஸர்வயோக
விநி: ஸ்ருத: ॥

இந்த சுலோகத்தில் சர்வேசுவரன் என்ற பெயர் மட்டும் அல்லாது, சர்வ என்று தொடங்கும் வேறிரு பெயர்களும் வருகின்றன. உயிர்கள் அனைத்திற்கும் மூல காரணம் ஆகிய அவரை 99ம் நாமம் சர்வாதி: எல்லாவற்றிற்கும் தொடக்கம் எனக் கூறுகிறது. கடைசியாக உள்ள நாமம் கடவுளை அனைத்துத் தொடர்புகளையும் களைந்து நிற்பவர் என வர்ணிக்கிறது. யோகம் என்றால் சம்பந்தம், தொடர்பு. எவ்விதத் தொடர்பும் இன்றித் தனித்து நிற்பவர் சர்வ யோக விநிஸ்ருத: ஆவார். இந் நாமம் 103 ஆகும்.

சர்வ வல்லமை பொருந்திய சர்வேசுவரனுடைய சிறப்புகள் அனைத்தையுமே வரிசையாகப் பார்ப்போம்.

விஷ்ணு ஸஹஸ்ர நாம வரிசையில் 25வது பெயர் சற்றே அதிசயமானது. ஆம், ஸர்வ: என்பது அப்பெயர். ஆண்டவனிடம் அனைத்தும் அடக்கம். அவரை மீறியது ஏதும் இல்லை. எனவே சர்வ எனக் கூறிவிடின், எஞ்சியது ஏதும் இராது.

सर्वः शर्वः शिवः स्थाणुर्भूतादिर्निधिरव्ययः ।
सम्भवो भावनो भर्ता प्रभवः प्रभुरीश्वरः ॥

ஸர்வ: ஸர்வ: சிவ: ஸ்தாணுர்
பூதாதிர் நிதிரவ்யய: ।
ஸம்பவோ பாவனோ பர்த்தா ப்ரபவ:
ப்ரபுரீஸ்வர: ॥

இந்த இடத்தில் சங்கர பகவத் பாதர்கள் தம் பாஷ்யத்தில் மகா பாரதத்தில் உத்யோக பர்வத்திலே வரும் வியாசர் வாக்கை நமக்கு நினைவூட்டி விளக்கம் தருவார். நல்லது, பொல்லாதது அனைத்திற்கும்தோற்றுவாய், வளர்ச்சி, அழிவு அத்துணைக்கும் அவரே பொறுப்பு வகிக்கிறார். அனைத்தையும் எப்போதுமே அறிந்தவர் அவர். எனவே சர்வ: எனப் பெயர் பெற்றார் கடவுள். இது வியாசரின் விளக்கம்.

மேலே கண்ட சுலோகத்தின் முதல் பெயரையும் கடைசி நாமத்தையும் இணைத்தால், சர்வேசுவரன் நமக்குத் தரிசனம் தருவார்.

ஓர் ஆறு சுலோகம் தாண்டிச் சென்றால், சர்வ தர்சன: என்னும் நாமம் வரும்.

अहः संवत्सरो व्यालः प्रत्ययः सर्वदर्शनः ॥

அஹ: ஸம்வத்ஸரோ வ்யால: ப்ரத்யய:
ஸர்வதர்ஸன: ॥

எங்கும் எப்போதும் நடப்பன அனைத்தையும் பார்த்துக் கொண்டே இருப்பவர் இறைவன். எனவே சர்வ தர்சன: எனப்படுவார். எங்கே எவன் தனித்துத் திருட்டுத்தனமாக எது செய்தாலும், அதை அவனைத் தவிர இவரும் பார்த்துக்கொண்டே இருக்கிறார் என்கிறது, இந்த 94ம் நாமம். அதனால்தான் ஆண்டவன் சாட்சியாக என்று நாம் அவரைச் சாட்சிக்கு இழுக்கிறோம்.

அவர் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு இருக்கிறார் எனில், அது எப்படி சாத்தியம் ஆகும்?

திரு. ர. வேங்கடரத்தினம்,
நெய்வேலி.

இந்தக் கேள்விக்கு விளக்கும் தருவது 123ம் நாமம், அவர் எங்கும் புகுந்துள்ளவர் என்கிறது.

सर्वगः सर्वविद्भानुर्विष्वक्सेनो जनार्दनः ।

ஸர்வக: ஸர்வவித்பானுர் விஷ்வக்
ஸேனோ ஜனார்தன: ।

எதிலும், எங்கும் உள்ளவர் என்பது, குறிப்பாகத் திருமாலுக்குப் புதிய விஷயமே அல்ல. வியாபித்து நிறைந்து நிற்பவர் [என்பதுதான் விஷ்ணு என்ற திருப்பெயருக்குப் பொருள்.

அடுத்து வரும் பெயர் எல்லாம் அறிந்து விளங்க வைப்பவர் எனப் பொருள்படும்—சர்வ வித்பானு: யாவும் உணர்ந்த பகலவன் என்றும் கொள்ளலாம். (நாமம் 124)

இறைவன் நடப்பன அனைத்தையும் பார்த்துக் கொண்டிருக்கிறார். ஏன், நடவாதவற்றையும் குறிப்பாகக் கவனித்து வருகிறார். இந்தத் தன்மையைச் சுட்டுவது 'ஸர்வத்ருக்' என்ற திருநாமம் வரும் சுலோகம் வருமாறு:

अमृत्युः सर्वदृक्सिंहः सन्धाता सन्धिमान् स्थिरः ।

அம்ருத்யு: ஸர்வத்ருக் ஸிம்ஹ:
ஸந்தாதா ஸந்திமான் ஸ்திர: ।

சர்வத்ருக் என்ற சொல் உணர்த்துவது, கடவுள் நாம் செய்தது, செய்யத் தவறியது யாவற்றையும் கவனிக்கிறார் என்பதை, தர்மம் அதர்மம் இரண்டையும் கவனிப்பது அவர்க்குக் கைவந்த கலை என்கிறது இந்த 199ம் திருப்பெயர்.

ஆமாம், இவ்வளவெல்லாம் சொல்லிக் கொண்டு போகிறோமே, அவர்க்கு விளக்கம் தருவது எங்ஙனம்?

160 திருநாமங்கள் தாண்டிச் சென்றால், விடை கிடைக்கிறது.

இறைவன் எல்லா இலக்கணங்களினு லும் விளக்கப்படுபவர். சர்வ லக்ஷண லக்ஷண்ய: என்பது 360ம் திருப் பெயர்.

सर्वलक्षणलक्षण्यो लक्ष्मीवान् समितिञ्जयः ।

ஸர்வ லக்ஷண லக்ஷண்யோ
லக்ஷ்மீ வான் ஸமிதின்ஜய: |

அவர் பரம்பொருள் ஆதலால், விளக்கங்கள் அனைத்தினுலும் விளங்கி நிற்பவர் என ஆதிசங்கரர் தெளி வாக்குவார். இலட்சியப் பொருள் ஈசுவரன். பிரமாணங்கள் அனைத்தின் மீது எழுந்து நிற்பவர் அவர்.

யாவும் அறிந்த அவர் யாவற்றை யும் பார்த்துக்கொண்டே இருப்பவர் என்பன, பின்வரும் அடியில் உள்ள இரு பெயர்கள்.

सर्वदर्शी विमुक्तात्मा सर्वज्ञो ज्ञानमुत्तमम् ॥

ஸர்வதர்ஸீ விமுக்தாத்மா ஸர்வக்-
ஞோ ஞானமுத்தமம் ॥

திருமால் சர்வக்ஞன் ஆனதால், அவரை அறிதலே உத்தமமான ஞானம் ஆகும்!

சர்வதர்சி, சர்வதர்சன: என்ற கருத்தையே 625ம் பெயர் வலி புறுத்தும்.

उदीर्णः सर्वतश्चक्षुः अनीशः शाश्वतःस्थिरः ।

உதீர்ண: ஸர்வதஸ்சக்ஷு: அநீஸ:
சாச்வதஸ்திர: |

எல்லாப் புறமும் பார்க்க, அவர்க் குக் கண் அமைந்துள்ளது. உலகி னுக்கே கண் ஆனவர் அவர் என்பது வேதம் (விஸ்வத: சக்ஷு:) அடுத்தாற் போல் 89ம் சுலோகத்தில் வரும் ஒரு நாமம் சற்றே புதிய கோணத்தில் பகவானைப் பேசுகிறது.

भूतावासो वासुदेवः सर्वासुनिलयोऽनलः ।

பூதாவாஸோ வாஸுதேவ: ஸர்வாஸு
நிலயோ'னல: |

உயிர்கள் யாவும் இறுதியில் அடங்கி யொடுங்கிப் போகும் இடம் அவரே ஆவார். ஜீவான்மாக்கள் போய்ச் சேர வேண்டியது அப்பர மாத்மாவினிடம்தானே என்பதை நினைவூட்டுவது சர்வாசுநிலய: என்ற 710ம் பெயர்.

விஷ்ணு ஸஹ்ஸ்ர நாம வரிசையில், ஒரு முக்கால் பகுதி ஆனதும் வரு கிற பெயர், அவரை ஆயுதம் தாங் கியவருள் தலை சிறந்தவர் எனக் கொண்டாடுகிறது.

तेजोवृषो द्युतिधरः सर्वशस्त्रभृतां वरः ।

தேஜோவ்ருஷோ த்யுதிதர: ஸர்வ
சஸ்த்ர ப்ருதாம் வர: |

இந்த அடியில் வரும் பெயர்கள் யாவுமே க்ஷத்திரியச் சிறப்புக் கூறு வனவாக அமைந்துள்ளன எனலாம். ஆயுத வீரர்கள் அனைவரிலும் உயர்ந் தவர் திருமால். கோடரியும் கையு மாய் வரினும் சரி, கோதண்டம் ஏந்தியவராயினும் சரி, கலப்பை வைத்திருப்பினும் சரி, இராமர்க்கு இணை இராமர் தானே?

எனவே எல்லாரையும் வென்று விடுபவர் அவர். அனைவரையும் ஜயிப் பவர் அவர். ஆனால், அறியாது குருட்டு அதிர்ஷ்டத்தில் வெல்பவர் அல்ல. விஷயம் தெரிந்த வெற்றி வீரர் அவர்.

अर्को वाजसनः शृङ्गी जयन्तः सर्वविज्जयी ॥

அர்க்கோ வாஜஸன: ச்ருங்கி ஜயந்த:
ஸர்வவிஜ்ஜயீ ||

சர்வவித் என்றால் யாவும் அறிந்தவர். அத்தோடு, ஜயீ வேறு உள்ளது. வெறும் வெற்றி வீரர் அல்ல என்பது குறிப்பு.

மேலே சென்றால், 802-ம் திரு நாமம் சர்வ வாகீச்வரே ச்வர: என்ப தாகும்.

सुवर्णबिन्दुरक्षोभ्यः सर्ववागीश्वरेश्वरः ।

ஸுவர்ணபிந்துரக்ஷோப்ய:
ஸர்வவாஸ்கீவரேஸ்வர: |

இரண்டு முறை ஈசுவர என்ற சொல் வரும் பெயர் இது. வாகீச்வரன் பிரம்ம தேவன். பல பிரம்மாக்களுக் கும் ஈசுவரன் ஆனவர் திருமால்.

மேலே சென்றால், தரிசனம் தருப வர் சர்வகாமங்களையும் உவந்தளிப்ப வர்.

भारभृत्कथितो योगी योगीशः सर्वकामदः ।

பாரப்ருத் கதிதோ யோகி யோகிச:
ஸர்வ காமத: |

இங்கு வரும் சர்வ காமத: என்ற பொருள், ஆசைகள் அனைத்தையும் அளிப்பவர் என்பதாம். வரங்கள் வழங்குபவர் அவர். இது 851-வது நாமம்.

அடுத்தாற்போல், மகாவிஷ்ணு எதிலும் திறமைசாலியாகத் தோன்று வார். சர்வஸஹ: என்பதற்கு எல்லா வற்றையும் எதிர்த்து நிற்க வல்லவர்; தாங்கிக் கொள்பவர் என்றும் பொருள் கூறலாம்.

अपराजितः सर्वसहो नियन्ता नियमो यमः ॥

அபராஜித: ஸர்வஸஹோ நியந்தா
நியமோ' யம: ||

இந்த சர்வசஹ: என்ற சொல் அவ ரது வல்லமை—பொறுமை இரண்டை யும் உணர்த்துவது.

இடையில் இன்னொரு நாமம் வரு கிறது; சர்வதோமுக: என்று.

अमृतांशोऽमृतवपुः सर्वज्ञः सर्वतोमुखः ॥

அம்ருதாம்சோ' ம்ருதவபு: ஸர்வக்ஞ:
ஸர்வதோமுக: ||

ஏற்கெனவே ஓரிடத்தில், பகவான் எல்லாப் புறங்களிலும் கண்கள் கொண்டவர் என்பதைக் கண்டோம்- சர்வத: சக்ஷு: அதனால்தான் அவ ரால் எல்லா இடங்களையும் ஏக காலத்தில் கவனித்துக் கொண்டு சர்வ தர்சியாகவும் சர்வ தர்சனராகவும் இருக்க முடிகிறது. இங்கு வரும் திருநாமம், அவர் அனைத்துத் திக்கிலும் முகம் படைத்தவர் எனக்கூறுகிறது. ஆம், எல்லாத் திசைகளிலும் பார்க்கக் கண்கள் கொண்டவர் எனில், முகமும் அப்ப டித் தானே நாலாபுறமும் நோக்குவ தாக அமைதல் வேண்டும். எனவே அவர் சர்வதோமுக: எனப்படுவார்.

நாம் இங்கிருந்து சஹஸ்ரநாமத் தின் இறுதித் திருப்பெயருக்குப் போகலாம். கடைசி அடியின் இறுதி யில் வருவது அந்நாமம்.

रथाङ्गपाणिरक्षोभ्यः सर्वप्रहरणायुधः ॥

ரதாங்கபாணிரக்ஷோப்ய:
ஸர்வப்ரஹரணாயுத: ||

தாக்குதற்கு வேண்டிய ஆயுதங் கள் கொண்டவர் அவர் என்பது இந் நாமம். ஆம், இன்னதுதான் அவர்க்கு ஆயுதம் என்ற வரையறையில்லை. கையில் எது கிடைத்ததோ, அதனால் தாக்கி ஆளை வீழ்த்துபவர். நரசிம்மர் நகத்தினால் இரணியனை மாய்க்க வில்லையா? வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் எனும்போது, சர்வேசுவர னுக்குச் சகலமும் சஸ்திரம் தானே? எனவே இங்கும் சர்வ வல்லமை பொருந்திய பகவானது இயல்பே பேசப் பெறுகிறது.

ஈசுவரன் எல்லா உயிர்களுக்கும் தோற்றுவாயாக உள்ளார்; அவை அனைத்தும் இறுதியில் ஒடுங்கிப் போவதும் அவரிடத்தே. ஒவ்வொரு கணமும் அனைத்தின் இயக்கத்தை யும் கண் காணித்து வருகிறார். அவர் களுடைய ஆசைகளை நிறைவேற்றி யருள்கிறார். தேவையிருப்பின், பொறுத்துப் பார்த்துக்கொண்டே இருந்து விட்டுக் கடைசியில் தீர்த் துக் கட்டவும் செய்கிறார்!

ஆம், அதனால் தான் அனைத்தும் அவரே எனும்படியாக, அவர்க்கு சர்வ என்றே ஒரு திருப்பெயர் கண் டோம்!



(19-ம் பக்கத் தொடர்ச்சி)

**அருச்சை மூர்த்தங்கள் எவ்வளவு?**

"யோக மூர்த்தம்", "போக மூர்த்தம்", "வீர மூர்த்தம்" என மூன்று வகைப்படும். யோகிகள் மூர்த்தத்தையும், இன்பம நுகருபவர்கள் போக மூர்த்தத்தையும், வீரர்கள் வீர மூர்த்தத்தையும் வழிபடுவார்கள். ஆயினும் இம்மூன்றில் போக மூர்த்தமே சிறப்புடைத்து. ஆபிசாரிகம் என நான்காவது மூர்த்தத்தையும் சேர்த்துக் கூறுவதுண்டு. இவைகளைத் தவிர, கோயிலுக்குள் ஸ்நானபேரம், துருவபேரம், பலிபேரம் என்பன போன்ற மூர்த்திகளும் உண்டு. இவ்வடிவங்கள் இறைவன் ஆஸ்தானத்திலேயே இருப்பார்கள். சாளக்கிராம பூஜை மிகவும் சிறந்தது.

**திருமால் கோலங்கள் எவ்வளவு?**

1. பள்ளிகொண்ட திருக்கோலம்
2. நின்ற திருக்கோலம்.
3. வீற்றிருந்த திருக்கோலம் என்பன.

**அருச்சைக்கு உள்ள பிரிவுகள் என்ன?**

வீட்டில் பூசிக்கப்படும் கிருஹாருச்சை, கோயில்களில் பூசிக்கப்படும் ஆலயாருச்சை என இருவகை. இதனை ஸ்வார்த்தம் (தங்கள் நலனுக்காக) பரார்த்தம் (நாட்டின் நலனுக்காக) என இருவகையாகவும் கூறுவார்கள்.

**சாளக்கிராமம் என்றால் என்ன?**

நேபாளத்தில் கண்டகி என்னும் புண்ணிய நதியில், விஷ்ணு ஸாந்நித்தியத்துடன் கிடைக்கும், 2, 4, 7, 14 உள் சக்கரங்களுடன் கூடிய வஜ்ர கீடம் என்ற ஒருவகை நீர் ஜந்துவின் கூடு என்பார்கள். சாளக்கிராமத்துக்குப் பால் அபிஷேகம் செய்து, அதைப் பருகுவது உடலுக்கும் அறிவுக்கும் மிகவும் நல்லது. சாளக்கிராம வடிவத்தில் திருமாலை வழிபட்டால் பூசை செய்யும்போது குற்றம் குறைகள் இருப்பினும் மன்னித்து விடுவார் என்பர். சாளக்கிராமத்தைத் தொட்டு பெண்கள் பூசை செய்யக் கூடாது. 12 சாளக்கிராமங்களை ஒரு க்ஷேத்திரம் என்பார்கள்:

## திருப்பதியில் தங்குவசதி விவரங்கள்

| | அறைகளின் எண்ணிக்கை | வாடகை | நாள் ஒன்றுக்கு |
|---|---|---|---|
| I ஸ்ரீநிவாசா சத்திரம் (முதல் சத்திரம்) பேருந்து நிலையத்திற்கு அருகில். | | | |
| (i) மேஜை நாற்காலிகள் மற்றும் இரண்டுபடுக்கை வசதிகளைக் கொண்டது | 30 | ரூ. 12/– | ,, |
| (ii) மேஜை நாற்காலிகள் மற்றும் நான்கு படுக்கை வசதிகளைக் கொண்டது. | 18 | ரூ. 15/– | ,, |
| (iii) மேஜை நாற்காலிகள் ஒருபடுக்கை வசதி கொண்டது. | 39 | ரூ. 10/– | ,, |
| II ஸ்ரீ வேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி | | | |
| மேஜை நாற்காலிகள் மற்றும் இரண்டு படுக்கை வசதிகளைக் கொண்டது. | 16 அறை தொகுதிகள் | ரூ. 16/– | ,, |
| III ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி | | | |
| (i) மேஜை நாற்காலிகள் மற்றும் இரண்டு படுக்கை வசதிகளைக் கொண்டது. (குளிர்ச்சாதனம் பொருத்தப்பட்டது) | 10 அறைதொகுதிகள் | ரூ. 40/– | ,, |
| (ii) மேஜை நாற்காலிகள் மற்றும் ஒரு படுக்கை வசதி கொண்டது (குளிர்சாதனம் பொருத்தப் பட்டது) | 2 அறைதொகுதிகள் | ரூ. 30/– | ,, |

எம்பெருமானுடைய ஸ்வரூபம் ஐந்து வகைப்பட்டிருக்கும்—அந்தர்யாமித்வம், பரத்வம், வ்யூஹம், விபவங்கள், அர்ச்சாவதாரம். "பூதஜலம் போலே அந்தர்யாமித்வம்;" ஆவரண ஜலம் போலே பரத்வம்; பாற்கடல் போலே வ்யூஹம்; பெருக்காறு போலே விபவங்கள்; அதிலே தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவதாரம்" என்று அண்ணன் உலகாசிரியன் திருவாய் மலர்ந்தருளியது போல் அப்போதே கண்டு பற்றவேணும் என்ற முமுக்ஷுக்களுக்கு அர்ச்சாவதாரமே பயன்படும். ஸகல கல்யாண குணங்களும் ஒருங்கே அமையப் பெற்றதினாலன்றோ "ஆழ்வார்கள் பலவிடங்களிலும் ப்ரபத்தி பண்ணிற்றும் அர்ச்சாவதாரத்திலே". இவ்வாறு ஆழ்வார்கள் மங்களாஸாஸநம் செய்யப்பட்ட திவ்ய தேசங்களுள் "திருமெய்யம்" என்ற பாண்டிய நாட்டு திவ்யதேசமும் ஒன்று.






## மார்க்கம் :

சென்னை — மானாமதுரை கார்டு லைனில் "திருமெய்யம்" என்ற ஸ்டேஷனுள்ளது. ஆனால் பஸ் மார்க்கமாக செல்வது சுலபம். திருச்சியிலிருந்து மதுரைக்குச் செல்லும் பஸ்களில் செல்லலாம். இந்த க்ஷேத்ரம் புதுக்கோட்டைக்கு 12 மைலில் உள்ளது.

## கோவிலமைப்பு :

ராஜகோபுரத்தை தரிசித்து உள்ளே சென்றதும் சக்கரத்தாழ்வார், கருடன் ஸன்னதிகளை ஸேவிக்கலாம். பிராட்டியை புருஷாகாரமாகக் கொண்டு பெருமாளை ஸேவிக்கவேண்டும் என்ற ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்திற்கேற்ப, முதலில் உஜ்ஜீவந தாயார் ஸன்னதி உள்ளது. தாயாரை ஸேவித்துக் கொண்டு பிரதக்ஷிணமாகச் சென்றால் 'ஸத்யகிரி நாதன்' மலைக்குகையில், பாற்கடலில் போலே ஆதிசேஷன் மேல் பள்ளி கொண்டிருக்கிறார். இவர் திருமேனியை ஸேவிக்க, அர்ச்சகர் கற்பூர ஹாரத்தி ஸமர்ப்பிக்கும் பொழுது, நாபி, திருமுடி, திருவடி, இவைகளை ஆங்காங்கே சென்று ஸேவித்தால் திருமேனி முழுவதும் ஸேவிக்க முடியும். இது ஒரு ஆச்சர்யமான திருக்கோலம். இந்தப் பெருமாளை ப்ரதக்ஷிணம் செய்ய "ஸத்யகிரி" (மலையையே) பிரதக்ஷிணம் செய்யவேண்டும். இவரை ஸேவித்த பிறகு நின்ற திருக்கோலத்தில் அதிஸுந்தரமாக ஸேவை சாதிக்கும், "ஸத்யமூர்த்தி" பெருமாளை ஸேவிக்கலாம். இவருக்கே எல்லா உத்ஸவங்களும் நடைபெறுகின்றன. பிறகு ராமர் ஸன்னதியை ஸேவிக்கலாம்.

## தீர்த்தம் :

ராமர் ஸன்னதிக்கு அருகில் ஸத்ய புஷ்கரிணி உள்ளது. இந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்ய ஸகலவிதபாபங்களும் விலகும் என்று ஸ்தல புராணம் விசேஷித்துக் கூறுகிறது.

திரு. T. வெங்கடேஷ்,
திருவல்லிக்கேணி.

திருமங்கையாழ்வார் பெரிய திருமடலில் "திருமெய்யத்தின்னமுத வெள்ளம்" என்றும், பெரிய திருமொழியில் "திருமெய்ய மலையாளா" மெய்யம் அமர்ந்த பெருமானை, "கைதொழாக் கைகள் கைகளல்ல" என்றும் அருளிச் செய்துள்ளார். ஸ்ரீரங்கத்தில் துருஷ்கர் ஆக்ரமிப்பு ஏற்பட்ட காலத்தில் ஆசார்யசீலரான "கோயிலண்ணன்", திருமெய்யத்தில் எழுந்தருளியிருந்து அருளிச் செயல் வ்யாக்யானங்களை ப்ரவசனம் செய்தருளினார்.

திருமெய்யம் க்ஷேத்ர மஹாத்மியம், பிரும்மாண்ட புராணம் மகேசுவரநாரத ஸம்வாதத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அதன் சுருக்கம் பின்வருமாறு :

## திருமெய்யம் க்ஷேத்ர மஹாத்மியச் சுருக்கம்

பெருமை பொருந்திய எட்டெழுத்துக்களோடு கூடிய "அஷ்டாக்ஷர மந்திரத்தால்" பூஜிக்கத்தக்க க்ஷேத்ரங்கள் இருபத்தெட்டினுள் "திருமெய்யம்" ஒன்றாகும். அந்தப் புண்ணிய க்ஷேத்ரங்களுள் நற்றவம் செய்பவர்களுக்கு குறுகிய காலத்திற்குள் பயனளிக்கும் ஒரே க்ஷேத்ரம் திருமெய்யம் என்ற ஸத்திய க்ஷேத்ரம். ஆதிசேஷன், அத்திரி மகரிஷியின் புத்ரனான சந்திரன், ஸத்திய மஹரிஷி, புரூரவஸ் என்ற அரசன், தக்ஷகன், இந்திரத்யும்னன் ஆகியோர் தவம் செய்து ஸித்திபடைந்தனர்.

## ஸத்திய தீர்த்த மஹிமை :

மற்ற தீர்த்தங்கள் யாவும் ஸ்நானஞ் செய்வதாலும், சிரஸில் தெளித்துக் கொள்வதாலும் பாபம் விலகும். இந்த ஸத்திய புஷ்கரிணி தீர்த்தமோ

# மணிநிறவண்ணன் மாதவனே

ஸ்ரீ. எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், - திருச்சி-17.

மே 1981 ஸப்தகிரியில் 'தெள்ளியார் வணங்கும் மலை' என்னும் தலைப்பில் சென்னை திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் எழுதியுள்ள கட்டுரையில் 'மணிநிறவண்ணன்' (பெரிய திருமொழி 1-8-2) என்று திருமங்கையாழ்வார் அருளியிருக்கும் திருநாமத்துக்குக் கொடுத்திருக்கும் விளக்கம் பற்றி இங்கு ஆராய்வோம்.

''மாணிக்கம் போன்ற வண்ணமுடைய சிவபிரானுகவும் காட்சி தருபவன் அவனே'' என்று திரு. கி. வா. ஜ. எழுதியிருப்பது திருமங்கையாழ்வார் திருவுள்ளத்துக்குப் பொருந்தாது. பொதுவாக ஆழ்வார்கள் அனைவரும் ''மணிவண்ணன்'' என்று திருமாலையே குறிப்பர். 'மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா' (திருப்பல்லாண்டு 1) என்று பெரியாழ்வாரும், 'வைகுந்தா மணிவண்ணனே' (திருவாய்மொழி 2-6-1) என்று நம்மாழ்வாரும், 'மாயன் மணி வண்ணனெம்மான்' (பெரிய திருமொழி 9-3-6) என்று திருமங்கையாழ்வாரும் பாடியிருப்பதைக் காணலாம். இவ்விடங்களிலெல்லாம் 'மணி' என்பது நீலமணியையே குறிக்கும். சிவனை மணிவண்ணன் என்று ஆழ்வார்கள் எவரும் எங்கும் பாடவில்லை; நெருப்புப் போன்ற உருவை உடையவன் என்றே பாடியிருக்கிறார்கள். 'தழல் நிறவண்ணன்' (பெரிய திருமொழி 6-1-3) 'ஒன்று செந்தீ' (திருநெடுந்தாண்டகம் 2) என்று திருமங்கையாழ்வாரும், 'எரியுருவத்தேறெி' (இரண்டாந்திருவந்தாதி 63) என்று பூதத்தாழ்வாரும் கூறியிருப்பதைக் காண்க. ஆகையால் மணிநிறவண்ணன் என்பதற்கு ''(சிவந்த) மாணிக்கம் போன்ற வண்ணமுடைய சிவபிரான்'' என்று திரு. கி. வா. ஜ. பொருள் கொண்டது திருமங்கையாழ்வார் திருவுள்ளத்துக்கு ஏலாது.

''வெள்ளியான் கரியான் மணி நிறவண்ணன்'' என்னும் பாசுரத்துக்கு ''கிருதயுகத்தில் வெளுத்த நிறத்தையுடையனுய், கலியுகத்தில் கறுத்த நிறத்தையுடையனுய், த்வாபரயுகத்தில் ச்யாமமான நிறத்தையுடையனுயிருக்கும்'' என்று வியாக்கியான சக்ரவர்த்தியான பெரிய வாச்சான் பிள்ளை அருளியிருக்கும் பொருளே திருமங்கையாழ்வார் திருவுள்ளத்துக்கு மிகவும் பொருந்தியதாகும். ''திருவடிவில் கருநெடுமால் சேயனென்றும் திரேதைக்கண், வளையுருவாய்த் திகழ்ந்தானென்றும்...... பெருமானைக் கரு நீலவண்ணன் தன்னை'' (திருநெடுந்தாண்டகம் 3) என்னும் பாசுரத்தில் திருமங்கையாழ்வாரும் யுகந்தோறும் திருமாலது திருநிறங்கள் மாறுபடுவதை உணர்த்தினர்.

மேலும் ''என்றெண்ணி நாடொறும் தெள்ளியார் வணங்கும் மலை'' (பெரிய திருமொழி 1-8-2) என்று அருளிச் செய்கிறுர் திருமங்கையாழ்வார். தெளிந்த அறிவுடையவர்களே தெள்ளியாராவர். அவர்களுக்குக் குழப்பம் கிடையாது. திருவேங்கடவனைத் திருமாலாகவே அவர்கள் துணிந்திருப்பார்கள். ''நெற்றிமேல் கண்ணுனும் நிறைமொழிவாய் நான்முகனும்'' (பெரிய திருமொழி 11-6-3) ''எம்பெருமான் உண்டுமிழ்ந்த எச்சில் தேவர் அல்லாதார் தாமுளரே'' (பெரிய திருமொழி 11-6-2) என்று திருமங்கையாழ்வாரால் படைக்கப்படும் ஜீவர்களாக அறுதியிடப்பட்ட பிரமன், சிவன் முதலானவர்களைத் திருவேங்கடவனுகக் குழம்பும் மயக்கம் தெள்ளியாருக்குக் கிடையாது. ''வெள்ளியார் என்பது வெள்ளி மலையை இருப்பிடமாகக் கொண்ட ருத்ரனைக் குறிக்கும்'' என்பது இவ்விடத்தில் பெரிய வாச்சான்பிள்ளையின் வியாக்யானம். நிற்க.

''திருவேங்கடவனை எந்த தெய்வமாக வேண்டுமானுலும் கொள்ளலாம்'' என்பது சமீப காலத்தில் மற்ற தெய்வங்களுக்கு பக்தர்களாகயிருப்பவர்களால் உருவாக்கப்பட்ட கொள்கையாகும். இதை ஆழ்வார் மேல் ஏறிடுவது முறையற்றது. ''வெள்ளியான் கரியான் மணி நிற வண்ணன்'' (பெரிய திருமொழி 9-10-3) என்று இதே தொடரைத் திருமங்கையாழ்வார் திருக்கோட்டியூரில் வாழும் எம்பெருமானுக்கும் வழங்கியிருக்கையாலே, திரு. கி. வா. ஜ. வின் கருத்து அடியோடு பொருந்தாது என்பது தெளிவாக விளங்குகிறது. ஃ

கையினுல் ஸ்பர்சிப்பதாலும், வாயினுல் ஸத்திய புஷ்கரிணி என்று சொல்வதாலும் பாபத்தை விலக்கும். ஞாயிற்றுக்கிழமை அருணுேதயத்தில் ஸ்நானம் செய்வதால் ஸகலவித பாபங்கள் விலகும். இந்த பூலோகத்தில் ஆறுகள், தடாகங்கள், கிணறுகள், கடல்கள், மலையருவிகள் ஆகிய ஐந்து வகை புண்ணிய தீர்த்தங்களுள்ளன. முற்காலத்தில் அவை தம்மிடத்தில் எப்பொழுதும் ஸ்நானம் செய்யும் பாபி ஜனங்களின் பாவங்களைச் சுமந்து, அப்பாவங்களைத் தாங்கள் சுமக்க சக்தியற்று ஸத்திய லோகம் சென்று பிரும்மாவை நமஸ்கரித்து விண்ணப்பிக்க, பிரும்மாவும், 'வைகாசி மாதம் பூர்ணிமை தினத்தில் திருமெய்யத்தில் ஸத்திய புஷ்கரிணி தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து உங்களிடமிருக்கும் ஜனங்களுடைய பாவங்களை போக்கிக் கொள்ளுங்கள்' என்றுர். ஸத்திய புஷ்கரிணியினருகில் புஷ்பபத்திரை என்ற நதி உள்ளது. இந்நதிக்கரையில் பித்ரு தேவதைகளுக்குச் செய்யும் திலதர்ப்பணமாவது, பிண்டதானமாவது கயையில் செய்த பலன் உண்டாகும். இங்கு பெரிய ஆலமரமானது சென்றது, இருப்பது, வருவது ஆகியவற்றை நன்றுய்த் தெரிந்ததாய் தனது இலைகளினுல் எல்லாப் பிராணிகளின் நட்பையும் தெரிவிக்கிறது. அம்மரத்திற்கு கிருதயுகத்தில் ''பத்திர வடம்'' என்றும், திரேதாயுகத்தில் ''வ்ருக்ஷராஜன்'' றும், துவாபரயுகத்தில் ''புத்திர தீபம்'' என்றும், கலியுகத்தில் 'பநஸம்' என்றும் பெயர்.

## ஸத்திய க்ஷேத்ரம்-பெயர்க்காரணம்

உலகத்தில் யாகம் முதலிய நல்ல காரியங்கள் நலிவுற்றன. அதனுல் தேவர்கள் மெலிவடைந்தார்கள். அதனுல் ஸத்தியம், தர்மம் இவைகளுக்கு வறுமை நேரிட்டது. அக்காலத்தில் தர்மதேவதை காலையின்

உருவம் கொண்டு அழகர் கோயிலை யடைந்தது. ஸத்திய தேவதை மான் உருவம் கொண்டு வேணு வனமாகிய (மூங்கிற்காடு) இந்த ஸ்தலத்தை யடைந்து, ஸத்தியகிரி ஸ்வரூபனை பகவானைப் பூஜித்துக்கொண்டு அசுர, ராக்ஷஸர்கள் நாசத்தை அடைய வேண்டுமென தவம் செய்து ஸித்தி யடைந்தது. அதனால் இந்த க்ஷேத்ரம் "ஸத்திய க்ஷேத்ரம்" என்று பெயர் பெற்றது. பின்னும் இந்த க்ஷேத்ரம், கிரி, வனம், தீர்த்தம், புரம், மூர்த்தி என்னும் இவையாறும் "ஸத்திய" என்ற பதத்தோடு சேர்த்தே சொல்லப்படுகிறது.

## ஆதிசேஷனின் தவம்

ஆதிசேஷனுக்கு கோபம் முதலிய தமோ குணங்கள் மேலிட, இக்குணங்கள் தன்னிடமிருந்து விலக ப்ரார்த்திக்க, பகவானும், "சென்றால் குடையாம், இருந்தால் சிங்காதனமாம்" என்னும்படியான ஆதிசேஷனை நீடித்த காலம் பிரிய மனமில்லாது, குறைந்த காலத்தில் தவப் பயனைப் பெறக்கூடிய ஸத்திய க்ஷேத்ரமடைந்து ஸத்திய புஷ்கரிணிக் கரையில் தவம் செய்தான். தவப்பயனாய், பகவான் ஹயக்ரீவ ரூபத்துடன் ஸேவை ஸாதித்து ஒரு வரம் கொடுத்தான். திருப்பாற்கடலில் போல் இந்த க்ஷேத்ரத்தில் என் எடலில் சயனித்து ஆராதிக்க விக்ரஹ ரூபமாய் ஸேவை தந்தருள வேணுமென்று ஆதிஷேன் ப்ரார்த்திக்க, பகவான் அங்கீகாரம் செய்து சயனத் திருக்கோலம் பூண்டான்.

## சந்திரன் தவம்

அத்திரியின் நேத்ரத்தினின்றும் பிரமனது அம்சமாக ஜனித்த சந்திரன், தன் பிதாவின் ஆணைப்படி, ஸத்திய க்ஷேத்ரத்தில் புலனடக்கி நாராயணனைக் குறித்து தவம் செய்தான். தவப்பயனாய், நாராயணன் ததிவாமன வேஷத்தோடு (வலது கையில் தயிருடன் சேர்ந்த அன்னத்தையும், மற்றொரு கையில் தாபத்தைப் போக்கும் அமிருத கும்பம்) ஸேவை ஸாதித்து வரம் கொடுத்தார். "சந்திர மண்டலத்தில் ததிவாமன வேஷத்தோடு காட்சியளிக்கவேண்டும்" என்ற சந்திரன் ப்ரார்த்தித்து தவப்பயனடைந்தான்.

## கருடன் தவம்

காச்யபரின் மனைவிகள் - கத்ரு, விநதை. ஒருநாள் இவர்களில் விநதையானவள் தேவேந்திரனுடைய குதிரை வெளுப்பென்று சொல்ல, கத்ரு அது கருப்பென்றாள். இருவர்களுக்கும் விவாதம் உண்டாகி, "எவர் பக்ஷம் ஜெயித்ததோ அவர்களுக்கு மற்றவள் அடிமை செய்யவேண்டியது அல்லது அடிமையை விலக்கிக் கொள்ளதேவாமிருதத்தைக்கொண்டு தர வேண்டியது" என்று தீர்மானித்தனர். உடனே, கத்ருவானவள், தனது புத்ரனை தக்ஷகன் என்ற ஸர்ப்பத்தைக் கொண்டு அக்குதிரையைக் கருமையாகச் செய்யச் சொன்னபடி தக்ஷகனும் வெண்மையை மறைத்தான். விநதையும் கத்ருவிற்கு அடிமையாகி விட்டாள். விநதை, தன் பர்த்தாவான காச்யபரிடம் தன் கஷ்டத்தை முறையிட, காச்யபரும், "ஹவிஸின் மீதியை நான்கு கவளமாக புசித்தால், 4 புத்திரர்கள் பிறப்பார்கள்; அவர்களில் ஒருவன் உதவிகொண்டு உன் அடிமை நீங்கும்" என்று கூறி ஹவிஸைக் கொடுத்தார். விநதை 4 கவளத்தையுண்டு கர்ப்பந்தரித்து 4 முட்டைகளையிட்டாள். அவற்றில் 2 முட்டைகள் ஆவலினால் தானே உடைத்துப் பார்க்க சிதறிவிட்டன. மற்றொன்றை உடைத்துப் பார்க்க அதனின்றும் அங்கக் குறைவாக ஒரு புத்ரன் தோன்றினான். நான்காவது முட்டையிலிருந்து சோதிமயமாய் "கருடன்" என்ற புத்திரன் தோன்றினான்.

கருடன் பிறந்தவுடன் கொடும்பசியால் வருந்தி, பிதாவிடம் தன்னுடைய பசியைத் தீர்த்தருளுமாறு வேண்ட, அவரும் "ஸோமஜித் என்ற யாகத்திற்காக ஏற்பட்ட நெய்க் குளத்தில் உள்ள ஆமையை விழுங்கி பசி தீர்த்து, ஸத்திய க்ஷேத்ரத்தில் தவம் செய்து உன்னுடைய தாயின் அடிமையை விலக்கிக் கொள்" என்றார். கருடனும் நெய்க்குளத்திலிருக்கும் ஆமையைத் தன் மூக்கினால் தூக்கி ஆலமரத்தில் மேல் வைத்துக் கொண்டு புசிக்க யத்தனித்த ஸமயத்தில் அம்மரம் பாரம் தாங்கமாட்டாமல் விழ, அதனடியில் தவம் செய்து கொண்டிருந்த முனிவர்கள் கூச்சலிட கருடனும் அவர்களை ரக்ஷிக்கவேண்டி, முறிந்த கிளையைத் தாங்கி, முனிவர்களிடம் ஆசி பெற்று ஸத்ய க்ஷேத்ரமடைந்து தவமியற்றினான். தவப் பயனாய் நாராயணன் லக்ஷ்மி தேவியுடன் ஸேவை ஸாதித்தருளி, வரம் ஒன்று கொடுக்க, கருடனும் தன்னுடைய தாய் விநதையின் அடிமை நீங்கும் படியாக அமிருதம் கிடைக்க வேணும் என்று ப்ரார்த்தித்தான். நாராயணனும் "மகாமேருவின் உச்சியில் முன்பு தேவர்கள் பூஜித்து மீதமான அமிருதம் ஒரு கலசத்தில் இந்திராதிதேவர்களால்ரக்ஷிக்கப்படுகிறது. நீ அங்கு சென்று காவலர்கள் எல்லோரையும் என்னுடைய ஆக்ஞையைக் கொண்டு மீட்டு அமிருதம் பெற்று கத்ருவிடம் கொடுத்து உன் தாயின் அடிமையை விலக்கிக்கொள். மேலும், கத்ருவின் புத்ரனை தக்ஷகனுடைய வஞ்சனையினால் உன் தாய்க்கு ஆபத்து நேரிட்டதால் நீ கத்ருவின் புத்ரர்களான நாகங்களுக்கு (அஷ்ட நாகங்களைத் தவிர—சேஷன், வாஸுகி தக்ஷகன், சங்கபாலன், கார்க்கோடகன், குளிகன், பதுமன், மகாபதுமன்) யமானுமாவாய்" என்றார். கருடனும் தன் தாயின் அடிமையை விலக்கினான். ஸத்ய க்ஷேத்ரத்தில் விக்ரஹ ரூபமாய் எழுந்தருளவேணும் என்று கருடன் ப்ரார்த்திக்க, பகவானும் இசைந்து எழுந்தருளினார்.

(அடுத்த இதழில் முடியும்.)

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

சீதாதேவியை மீட்கும் பொருட்டு மாண்டான் என்று கேள்வியுற்றதும் தம்பி இறந்தான் என்ற துன்பத்தை மறந்தான்.

'' பைந்தார், எங்கள் இராமன் பத்தினி
செந்தாள் வஞ்சி திறத்து இறந்தவன்
மைந்தா எம்பி வரமயில் கீர்த்தியோடு
உய்ந்தான் அல்லது உலந்தது
உண்மையோ.

அறமன்னுனுடன் எம்பி அன்பிளுேடு
உறவுன்னு உயிர் ஒன்ற ஏவினுன்
பெற ஒண்ணுததோர் வெற்றி பெற்ற
வற்கு
இறவு என்னும் இதின் இன்பம்
யாவதோ.''

—சம்பாதி படலம்.

ஒரு சிறந்த உத்தம பதிவிரதைக்கு உதவி செய்யப் புகுந்து தம்பி உயிர் நீத்தான் என்ற சொல் சம்பாதிக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கின்றது. சோகம் நீங்கி யாருக்கும் கிடைக்காத பெரும் யோகம் ''எம்பி வரம் பின் கீர்த்தியோடு உயர்ந்தான்'' என்று கம்பன் வாயிலாகக்கூற வைக்கின்றது. யாவராலும் எளிதில் அடைய முடியாத பேரின்பப் பேற்றைப் பெற்றுன் என்றதில் அவனுடைய பிறவி அடியோடு தீர்ந்தது என்று மிக்க மகிழ்ச்சி யடைந்தான் சம்பாதி. அரசு முடியிழந்து காட்டில் வனவாசம் செய்ய வந்த பிள்ளைக்குப் பெரிய தந்தை என்ற முறையில் உதவிகள் பல புரிந்து இறுதியில் தன் உயிரையும் கொடுத்திருக்கிறுன்.

அறம் அன்னுன் என இராமனை இங்கே கருதியிருந்ததால் அந்த தர்ம மூர்த்தியின் குண நலன்களை நன்கு தெரிந்தவன் சம்பாதி. புண்ணியமே ஒரு உருவம் மருவி திருமேனியாய் அகில உலகங்களும் உய்ய வில் ஒன்று கையில் ஏந்தி வந்துள்ளது என்று கருதியுள்ளவன். தன்னுடைய தம்பியின் மரணத்தைக் கேட்ட முதலில் மருகி அழுத சம்பாதி, பின்பு யாவற்றையும் அறிந்து, ஆத்ம சாந்திக்கு நீரில் மூழ்கி மானச கருமங்கள் புரிந்து மீண்டும் வந்து எல்லோருடனும் உவந்திருந்தான்.

பறவை வேந்தனுகிய சம்பாதியின் சிறகுகள் முன்பு கருகிப் போயிருந்தன. இராம காரியமாய் வருகின்ற வானரங்களை சந்திக்க நேருங்கால் இழந்த சிறகுகள் மீண்டும் வளர்ந்து வரும் என்று லோக சாரங்கர் என்ற முன்புங்கவர் முன்பே கூறியிருந்ததை அறிந்திருந்தான். ஆதலால், எல்லோரையும் வரவழைத்து இராம நாமத்தை உச்சரிக்க சிறகுகள் வளர்ந்தன. சம்பாதியின் வரலாறு, ''காய்கதிர் கடவுள் தேரைக் கண்ணுற்றும், கண்ணுருமுன் திமையும் சம்பவிக்கும், தவிர களித்தவர் கெடுதல் திண்ணம், சானகியை கபடன் வெளவி ஒளித்தவாய் துருவியுற்ற வானவர் இராம நாமம் விளித்திட சிறை வந்தோங்கும் என்று அன்று அளித்தான், அதனுல் ஆவி ஆற்றினேன்'' என்பதில் பிரதி பலிக்கின்றது. சூரியனின் சாரதியாகிய அருணனுக்கு அரம்பையிடம் பிறந்தவர்களில் மூத்தவன் சம்பாதி. இளையோன் ஜடாயு. இவர்கள் வேகமாகப் பறந்து சூரிய வீதியை அடைந்து போகும் பொழுது, வெப்பம் தாங்க முடியாமல், ஜடாயு தவிக்கையில், அவரை அணைத்து தன் சிறகின் கீழ் வரும்படி செய்து மேலும் பறந்து செல்ல, சிறகுகள் கரிந்து தீய்ந்தன. அதன்பின் கீழே தாழ்ந்து ஒரு மலைச் சாரலில் வீழ்ந்தான். அண்ணன் நிலையை நினைத்து ஜடாயு கவலையுற உடனே சம்பாதி பறவை இனங்களின் தலைமைப் பதவியைத் தந்து அருளினுன்.

ஒரு நாள் ஆகாயத்திலிருந்து ஒரு ஒலி எழுந்தது. ''ஜனகரின் அருமை மகள் சீதாதேவியைத்தேடி இராமன் ஏவலால் ஒரு வானர சேனை இங்கே வரும். அதனை நீ, என்று காண்கிருயோ அன்று உன் சிறகு வளர்ந்து உயர் நலமடைவாய்'' என்று ஒலித்தது. பின்பு சில காலம் கழித்து, ஒரு நாள் லோக சாரங்கன் என்ற முனிவரைக் கண்டு தொழ, அவர் ஞான திருஷ்டியால் எல்லாம் உணர்ந்து 'சம்பாதி, உனக்கு உறுதியாக நன்மையுண்டாகும். இராகவனின் தேவியைத் தேடி வானர சேனைகள் தெற்கு திசையை நோக்கி வரும். அவர்கள் இராம நாமத்தைக் கூறும் பொழுது, நீ உவந்து கேட்பாய். அப்பொழுது உன் சிறகுகள் வளரும். தென்பாலுள்ள மகேந்தர மலையில் போயிரு' என்று சொல்லி, மனச் செருக்கு வாழ்வைக் கெடுத்துவிடும் என்று உணர்த்திவிட்டுச் சென்றுர்.

சம்பாதியின் கண்களில் அன்பும், பண்பும், பரிவும் மிக்கிருந்தன. ''சில நாளைக்கு முன்னுல் ஆகாய மார்க்கமாய் இலங்கை வேந்தன் ஒரு அழகிய மங்கையை ரதத்தில் ஏற்றி சென்றதைக் கண்டேன். அது இராகவனின் தேவி என்று தெரிகிறது. இலங்கை நகரத்திற்கு தெற்கே, அசோக வனத்தில் தனியே தேவியைச் சிறை வைத்திருக்கிறுன். அங்கே போக முடியுமானுல் தேவியைக் காணலாம். தேவர்களோ, இராவணின் உத்தரவிற்கு அஞ்சி நிற்கின்றனர். காலனும் அணுக முடியாமல் வீரர்கள் உள்ளனர். நெடிய பல அரண்கள் இலங்கையைச் சூழ்ந்து இருக்கின்றன. அங்கே போவது மிகவும் கடினம்தான். உங்களில் வல்லவன் ஒருவனைத் தேர்ந்தெடுத்து அனுப்புங்கள். இல்லையேல், எல்லாவற்றையும் இராமச் சந்திரமூர்த்தியிடம் கூறி உடனே ஆவன செய்யுங்கள்'' என்று கூறினுன்.

காவ்விய அரங்கிலே, பாத்திரங்களை சமய சந்தர்ப்பங்களுக்கு ஏற்ப நடமாடவிடும் பாங்கே கம்பனுட்டாழ்வாரின் தனிச்சிறப்பு. ''சரண் எனக்கு யார் கொல்'' என்று ஜானகி அழுது ''சாம்ப, அரண் உனக்கு ஆவன வஞ்சி, அஞ்சல் என்று அருளின் எய்தி'' என்று உயிர் நீத்த ஜடாயுவுக்கு தன் கைகளால் இறுதிக் கடன்கள் செய்து மோட்சம் அளித்தார். அந்த ஜடாயுவை பரிவுடன் காப்பாற்றிய பெருமை, தன் சிறகுகளை அர்ப்பணித்த அருணனின் மூத்த மைந்தன் சம்பாதியைச் சார்ந்ததே. தன்னுடைய பங்கிற்கு, சீதையின் இருப்பிடத்தை விஸ்திரமாகக் கூறி, ''உலகை உய்விக்கும பொருட்டு வந்திருக்கும் இராகவனுக்கு செய்ய வேண்டிய காரியங்கள் அநேகம் வுள்ளன. சென்று கூறுங்கள்'' என்று உணர்த்திவிட்டுச் சென்றுர். புள்ளினங்கள் சகோதர வாஞ்சை, பறவைவுருவும் தெய்வீக அறிவும் மருவியுள்ள அருணனின் மைந்தர்களுக்கு மிக்குள்ளது என்பதே இச்றந்த பண்பு நலன்களின் எடுத்துக்காட்டு.



## பக்தி யோகம்

### அத்தியாயம்-12

பகுதி — 11

பக்தியின் உச்ச நிலைக்குப் போனவன் எப்படி இருப்பான் என்பதை அடுத்த சுலோகங்கள் விளக்குகின்றன.

ஸம: சத்ரௌ ச மித்ரே ச
ததா மானாபமானயோ: ।
ஸீதோஷ்ணஸுகது:கேஷு
ஸம: ஸங்கவிவர்ஜித: ॥ 18 ॥
துல்ய நிந்தாஸ்துதிர்மௌனீ
ஸந்துஷ்டோ யேன கேனசித் ।
அநிகேத: ஸ்திரமதிர்
பக்திமான் மே ப்ரியோ நர: ॥ 19 ॥

'பகைமையையும் நட்பையும், அங்ஙனமே மானத்தையும், அவமானத்தையும், நிகராக்கிக் குளிர் வெப்பம், இன்பம் ஆகியவைகளை ஒப்பாக்கிப் பற்று அற்றவன், இகழ்ச்சியையும், புகழ்ச்சியையும் ஒன்றாகக் கருதும் மௌனி, கிடைத்ததில் திருப்தி அடைபவன், இருக்க இடம் தேடாதவன், உறுதியான உள்ளம் உடையவன் — பக்திமானாகிய அவன் எனக்குப் பிரியமானவன்'

படைக்கப்பட்ட அனைவரும் பரமனின் குழந்தைகள். ஒரு தாயின் இரு குழந்தைகளில் ஒன்று கருப்பாகவும் மற்றது வெளுப்பாகவும் இருந்தால் தாய் நிற வேறுபாட்டைச் சிறிதும் பொருட்படுத்தாது இரண்டையும் ஒன்று போலவே நேசிப்பாள். அதுபோலவே பகவானும் தான் படைத்த அனைத்துயிரையும் ஒன்று போலவே நேசிக்கிறான். பகவானும் பக்தனும் வேறல்லர் என்பதால் பக்தன் அனைத்திடமும் நட்பு பாராட்டுகிறான், எதையும் வெறுப்பதில்லை.

சாதாரண நிலையில் உள்ள மக்கள் 'பிறர் நம்மை என்ன சொல்வார்களோ, நான்கு பேர் நம்மைப்பற்றி எப்படிப் பேசுவார்களோ' என்ற மான அவமானத்துக்குப் பயந்து செயல்களில் ஈடுபடுகின்றனர். ஆனால் பக்தர்கள்—பக்தியின் உச்ச கட்டத்தில் இதையெல்லாம் பொருட்படுத்துவதே கிடையாது.

நாரத பக்தி சூத்திரத்தின் 61-வது சூத்திரம்,

लोक हानौ चिन्ता न कार्या निवेदितात्मलोक वेदत्वात् ।

'தன்னையும் உலகையும் வேதத்தையும் பகவானுக்கு அர்ப்பணம் செய்துவிட்டமையால் உலக சம்பந்தமான கஷ்ட நஷ்டங்கள் ஏற்படும்பொழுது கவலைப்படக்கூடாது' என்று கூறுகிறது.

விஷ்ணுபுராணத்தில் ப்ரஹ்லாதன் பகவானிடம் வேண்டுகிறான்:

யா ப்ரீதிரவிவேகானாம்
விஷயேஷ்வநபாயினீ ।
த்வாமனுஸ்மரத: ஸா மே
ஹ்ருதயான் மாऽபஸர்ப்பது ॥

(விஷ்ணு புராணம்)

'அவிவேகிகளுக்கு விஷய சுகங்களில் திடமான எந்த ப்ரீதி இருக்கிறதோ அத்தகைய ப்ரீதி உன்னைத் தொடர்ந்து தியானிக்கும் என்னுடைய இதயத்தை விட்டு நீங்காதிருக்கட்டும்'.

உடல் அபிமானம் உள்ளவர்களுக்குத்தான் குளிர் உண்டு, வெப்பம் உண்டு. மான அவமானம் எல்லாம் உண்டு. உடல் அபிமானம் அற்றவர்களுக்குஇவையொன்றும் பாதிக்க மாட்டா. இமயமலைப் பகுதிகளில் அவதூத ஸந்யாஸிகள் வசிக்கிறார்கள். அவர்களது உடலில் எவ்வித ஆடையும் இருக்காது. அவர்கள் சதா பிரம்ம சிந்தனையில் லயித்திருப்பவர்கள் ஆதலால் உடல் அபிமானமே அவர்களுக்குக் கிடையாது. அத்தகைய நிலையில் கொஞ்சமும் களங்கம் அற்ற அவர்களைக் காணும் ஏனையோரது மனதிலும் களங்கம் ஏற்படாது. குழந்தைகளும் அத்தகைய ஞானிகளும் ஒரு நிலையினரே.

சதா பகவத் சிந்தனையில் ஊறியுள்ள பக்தனின் நிலை,

'அதை அடைந்து அதையே காண்பான், அதையே கேட்பான். அதையே பேசுவான். அதையே சிந்திப்பான்.' என்று இருக்கும்.

तत्प्राप्य तदेवावलोकयति तदेव शृणोति तदेव
भाषयति तदेव चिन्तयति । (55)




ஸ்ரீமத் பாகவதத்தில் ராஸக்ரீடையில் லயித்துள்ள கோபியரைப்பற்றி ஒரு விளக்கம் வருகிறது:

தன் மனஸ்காஸ் ததாலாபாஸ்
தத் விசேஷ்டாஸ் ததாத்மிகா: ।
தத் குணானேவ காயந்த்யோ
நாத் மாகாராணி ஸஸ்மரு: ॥

(ஸ்ரீமத் பாகவதம்)

'பகவானிடத்திலேயே மனம் சென்றவர்களாகவும் அவரைப் பற்றியே பேசுகின்றவர்களாகவும், அவரது லீலைகளை அபிநயம் செய்கின்றவர்களாகவும், அவரிடம் பிராணனை வைத்தவர்களாகவும் அவருடைய குணங்களையே பாடுகின்றவர்களாகவும் அவர்கள் தங்களுடைய வீடுகளை நினைக்கவில்லை'

பக்தர்கள் ஊரார் பேச்சைப் பொருட்படுத்தமாட்டார்கள் என்பதை நாரதபக்தி சூத்திரம் [illegible]

திரு. டி. கே. நாராயணன், M.Sc.
ஆசிரியர் "சமய ஜோதி" மதுரை.

நிர்ப்பய: (ஜன ஜல்ப நிர்பயாஃ— ஜனங் களின் பிதற்றலுக்குஅஞ்சாதவர்கள்) என்று குறிப்பிடுகிறது.

மேடையில் பாடும் பாடகன் அல்லது பேசும் பேச்சாளன் பொது வாகக் கேட்பவர்களிடமிருந்து பாராட்டுதலை எதிர்பார்க்கிறுன். அவர்கள் அவனைப் பாராட்டாவிட் டால் அவனுக்கு உள்ளச் சோர்வு ஏற்படுகிறது. மாறுக அவர்கள் அவனைப் பாராட்டினுல் அவனது உற்சாகம் அதிகரிக்கிறது. ஆனுல் பக்தனே தன்னை மறந்து இறை வனது நாமத்தைப் பாடுகிறுன். அவ னது புகழைத் துதிக்கிறுன். ஊரார் அவனைப் போற்றினுலும் தூற்றினு லும் அதை அவன் காதிலே போட் டுக் கொள்வதில்லை. பற்றுக்களை விட்டவன் பக்தன்.

நாரத பக்தி சூத்திரத்தில் மாயையை எவன் தாண்ட முடியும் என்ற கேள்விக்குப் பதில் வருகிறது.

कस्तरति कस्तरति मायाम् ?
य : संगांस्त्यजति, यो महानुभावं सेवते,
निर्ममो भवति ।

'மாயையை எவன் தாண்டுகிறுன்? எவன் பற்றுக்களை விடுகிறுனே, மகிமை பொருந்த ஞானிக்குத் தொண்டு செய்கிறுனே, மமகாரமற்ற வனுக ஆகிறுனே அவன் மாயையைத் தாண்டுகிறுன்.'

அவதூத கீதையும் இதைத் தான் வலியுறுத்துகிறது:

முக்திமிச்சஸி சேத் தாத
விஷயான் விஷவத் த்யஜ ॥
(அவதூத கீதை)

'குழந்தாய்! முக்தியை நீ வேண் டினுல், விஷயங்களை (புலன் இன்பங் களை) விஷம் போல் கருதி விடு வாயாக.'

திருமலை திருப்பதி தேவஸ்தானம்

## காட்டேஜ் கட்டண விவரங்கள்

| எண் | காட்டேஜ் விவரம் | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|---|
| 1. | டி. பி. சி. | ரூ.25/- ரூ.15/- ரூ.10/- |
| 2. | டி. பி. சி. 3வது வரிசை (ஹீட்டர் இல்லாதது) | ரூ. 10/- |
| 3. | டி. பி. சி. 3வது வரிசை (அறைத் தொகுதி களைக் கொண்ட காட்டேஜ்) | |
| | ஹீட்டர் வசதி கொண்டது | ரூ. 12/- |
| | ஹீட்டர் இல்லாதது | ரூ. 10/- |
| 4. | ஹில் வ்யூ டீலக்ஸ் காட்டேஜ் | ரூ. 20/- |
| 5. | ஹில் வ்யூ விருந்தினர் விடுதி | |
| | பெரியன | ரூ. 40/- |
| | சிறியன | ரூ. 20/- |
| 6. | ஹில் வ்யூ காட்டேஜ் | ரூ. 10/- |
| 7. | சங்கு மிட்டா காட்டேஜ் | ரூ. 15/- |
| 8. | சேஷாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 15/- |
| 9. | அஞ்சனுத்ரி காட்டேஜ் | ரூ. 15/- |
| 10. | கருடாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 15/- |
| 11. | திருமணத்திற்கான காட்டேஜ் | ரூ. 30/- |

விஷயம் என்பதுவே விஷம், அதாவது புலனின்பமே விஷம். புலனுக்கு அப்பாற்பட்ட இன்பம் அம்ருதம்.

எப்பேர்ப்பட்டவரையும் புகழ்ச்சி வலைக்குள் சிக்க வைக்கும், இகழ்ச்சி சினத்தைத் தூண்டும். ஆனுல் பக்தன் இதற்கு விதி விலக்கு. இகழ்ச்சியும் புகழ்ச்சியும் அவனை ஒன்றும் செய்யா. தன்னிடம் தகுதி இருக்கிறதோ இல்லையோ தன்னை எல்லோரும் புகழ வேண்டும் என்று எதிர்ப்பார்ப்பது சாதாரண மனிதர்களது இயல்பு. மாறுக, குணக்குன்றுகத் தான் விளங் கினுலும்கூட பிறரிடமிருந்து எந்த விதமான புகழுரைகளையும் விரும்பா திருத்தல் பக்தனது இயல்பு.

அடுத்து பக்தன் மௌனியாக இருப் பான் என்று பகவான் கூறுகிறுர். வாய் பேசாது இருப்போரை மௌனி எனல் உலக வழக்கம். இங்கே அப்படி நாம் பொருள் கொள்ளக் கூடாது. இறைவனைத் தவிர வேறு எதைப் பற்றியும் பேசாதிருப்பதால் பக்தன் மௌனி எனப்படுகிறுன் அவன் செய்யும் அனைத்தும் இறை வனுக்குப் பூஜையாய் விடுகிறது.

முண்டகோப நிஷதம்,

'தமேவைகம் ஜானத ஆத்மானம் அன்யா வாசா விமுஞ்சத அம்ருதஸ்யை ஷ ஸேது:'—

'அந்த ஒருவனுகிய பரமாத் மாவையே அறிவீர்களாக. மற்ற வார்த்தைகளை விடுக. இதுவே மோக்ஷத்திற்குப் பாலம்' என்கிறது.

தாயுமானவரும் இதே கருத்தை,

'கற்றதுங் கேட்டதுந்தானே ஏதுக்காகக்
கடபடமென் றுருட்டுதற்கோ கல்லால்
எம்மான்
குற்றமறக் கைகாட்டுங் கருத்தைக்
கண்டு
குணங்குறி யற்றின்ப நிட்டைகூட
அன்றோ'

என்று விவரிக்கிறுர்.

ஆன்ம சாதனையில், இறையனு பவத்தில் வீண் தர்க்கத்துக்கு இட மில்லை என்பதை ஸ்ரீ ராமகிருஷ்ணர்,

'ஆழமில்லாத குளத்தில் நீர் குடிக்க வேண்டுமானுல் அதைக் கலக்காமல் மெதுவாகக் குடிக்க வேண்டும். கலக்கினுல் அடியிலுள்ள சேறு மேலே கிளம்பி விடும். சாஸ்திரங்களைப் பற்றி வீண் வாதத்தினுல் இறங்கினுல் உன் மூளை கலங்கி விடும்', என்று தெளிவாகக் கூறுகிருர். மௌனத்தில்தான் பிரம்ம தத்துவமே அடங்குகிறது என்பது சான்ருேரது கூற்று.

கிடைத்ததில் திருப்தி அடைபவன் பக்தன், அவன் தனக்கென வீடு எதையும் தேடமாட்டான். எல்லா இடமும் அவனிடமே. 'கர தல பிட்சா தரு தல வாஸ:'—'கரங்களில் பிட்சை மரத்தடியில் வாசம்' என்பதுவே அவனது இலட்சியம். மகாபாரதம் சாந்தி பர்வத்தில், 'எவன் எதையும் உடையாக ஏற்று, எவ்வகை உணவையும் உண்டு எங்கு வேண்டுமானுலும் படுக்கிருனே அவனை தேவர்கள், ஜீவன் முக்தன் என அழைக்கிருர்கள்', என்று கூறுகிறது. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற அடிப்படையில் வாழ்பவன் பக்தன். உலக வாழ்க்கை என்ற பயணத்தில் கிடைத்ததைக் கொண்டு அவன் திருப்தி அடைகிருன்.

பக்தனைப் பற்றி இவ்வளவு விளக்கமாகக் கூறிய பகவான் இறுதியில் நம்மையெல்லாம் அன்புடன் வேண்டிக்கொள்கிருர்:

யே து தர்ம்யாம்ருதமிதம்
யதோக்தம் பர்யுபாஸதே ।
ச்ரத்ததானு மத்பரமா
பக்தாஸ்தேऽதீவ மே ப்ரியா: ॥ 20 ॥

'சிரத்தை உடைய எந்த அன்பர்கள் என்னையே கதியாகக் கொண்டு அமிர்தம் போன்ற இத்தர்மத்தை இங்கே உரைத்தபடி கடைப்பிடிக்கின்ருர்களோ அவர்களே எனக்கு மிகவும் இனியவர்களாவர்.'

எந்த ஒரு காரியத்தில் வெற்றிக்கும் சிரத்தை இன்றியமையாதது. 'சிரத்தாவான் லபதே ஞானம்'—சிரத்தை உடையவன் ஞானத்தை அடைகிருன் என்பது கண்ணனது கனிமொழி. தான் இதுவரை சொன்னதை பகவான் ஈண்டு 'अमृत धर्म' (அம்ருத தர்மம்) என்று அழைக்கிருர். அம்ருதம் என்ருல் சாகா நிலையைத் தரும் அரிய பொருள் என்பது அர்த்தம். 'தர்ம' என்பது இங்கே ஞானத்தைக் குறிக்கும். எந்த ஞானமானது கடைப்பிடிக்கப் படுகையில் அமரத்துவத்தை அளிக்கிறதோ அதை 'நான் உனக்குச் சொன்னேன்' என்று பகவான் கூறுகிருர்.

त्रिसत्यस्य भक्तिरेव गरीयसी भक्तिरेव गरीयसी ।

முக்காலத்தும் சத்தியப் பொருளான பகவானிடம் பக்தியே அனைத்திலும் சிறந்ததாம்.—நாரத பக்தி சூத்திரம்.

'சிரத்தையுடன் கூடியவர்களாக என்னையே கதியாகக் கொண்டு என்னை நீங்காத நினைவுடன் வழிபடும் பக்தர்கள் எனக்கு மிகவும் பிரியமானவர்கள்', என்று திரும்பத் திரும்ப பகவான் கூறுவதன் காரணம் பக்தியின் ஆரம்ப நிலையில் மனம் அங்குமிங்கும் அலைந்தாலும் போகப் போக இறுதியில் இறைவனிடம் மட்டுமே அது லயித்து இறைமயமாக ஆகிவிட வேண்டும் என்ற கருத்தை நம்மிடம் உறுதிப்படுத்துவதற்காகவே ஆகும். தர்மத்தைக் கடைப்பிடிக்கின்றவர் எவருக்கும் அழிவு ஏற்படாது. தர்மத்தைக் காக்கிறவனைத் தர்மமும் காக்கும்—'தர்மோ ரக்ஷதி ரக்ஷித:' என்பதுவே நமது மறைகளின் வாக்குறுதியாகும்; இதுவே தர்ம சாரமாகும்.

பக்தி மார்க்கத்தில் ஈடுபடும் நாம் பகவான் மேலே குறிப்பிட்ட பல நற்குணங்களைப் பெற்று விளங்க முயல வேண்டும். ஆரம்பத்தில் கடினமாகத் தோன்றுபவை நாளடைவில் அவனருளால் மிக எளிதாகிவிடும். 'இறைவா! உன் குழந்தையாகிய என்னைக் காப்பது உன் கடமை அல்லவோ!' என்று காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கினுல் நிச்சயம் அவன் ஓடோடியும் வந்து நம்மைக் காத்து ரட்சிப்பான் என்பதில் கொஞ்சமும் ஐயமில்லை.

(தொடரும்)

## ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோயில், திருப்பதி.

| அர்ஜித சேவைகள் | கட்டணம் | நேரம் |
|---|---|---|
| 1. அபிஷேகம் | ரூ. 1/- நபர் ஒருவர்க்கு | காலை 9-30 முதல் 10-00 வரை |
| 2. ஸகஸ்ரநாமா அர்ச்சனை | ரூ. 1/- நபர் ஒருவர்க்கு | மாலை 5-00 முதல் 6-00 வரை |

### பிரஸாத கட்டண விவரங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1) | புளியோதரை | — | ரூ. 50-00 |
| 2) | பொங்கல் | — | ரூ. 55-00 |
| 3) | தத்யோதனம் | — | ரூ. 40-00 |
| 4) | சர்க்கரைப் பொங்கல் | | ரூ. 65-00 |
| 5) | தோசை | — | ரூ. 35-00 |
| 6) | ஸீரா | — | ரூ. 155-00 |
| 7) | கேஸரிபாத் | — | ரூ. 85-00 |

# திருமலை திருப்பதி தேவஸ்தானம்
# திருப்பதி

## திருமலையில் ஏழுமலையானின் ஏழை பக்தர்களுக்கு இலவச உணவு வழங்க உங்களுக்கு விருப்பமுள்ளதா?

இந்து சமய இலக்கியங்கள் மற்றும் பல புராணக்கதைகள் ஏழை எளியோர்க்கு வழங்கப்படும் அன்னதான மகிமையைப் பற்றி விளக்கிக் கூறுகின்றன. அதுவும் குறிப்பாகத் திருமலை போன்ற திருத்தலத்தில் இறைவனைத் தரிசிக்க வரும் ஏழை யாத்திரிகர்களுக்கு இலவச உணவு வழங்கப்படுவது சாலச் சிறந்ததாகும். அதுபோலவே இறைவனின் பிரஸாதங்கள் அவனுடைய பக்தர்களுக்கு விநியோகிக்கப்படுவதும் மிகவும் உன்னதமாகவும், வழக்கில் இருந்து வருவதாகவும் கருதப்படுகிறது.

இவ்வகையில் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரால் புகுத்தப்பட்ட ''ஸ்ரீவேங்கடேஸ்வரா நித்யபிரஸாத தான அறக்கொடை'' திட்டத்தின் கீழ் நீங்கள், திருமலையில் இறைவனைத் தரிசிக்க வரும் ஏழை யாத்திரிகர்களுக்கு இறைவனின் பிரஸாதங்களான உணவுப் பொட்டலங்கள் அல்லது லட்டுகள் அல்லது வடைகள் ஆகியவற்றை இலவசமாக வழங்கலாம்.

திருமலை திருப்பதி தேவஸ்தானத்திற்கு ரூ. 500-ஐ முதலில் அறக்கொடையாக வழங்குதல் வேண்டும். இத்தொகையினால் வரும் வருட வட்டித் தொகையினைக்கொண்டு ஒவ்வொரு வருடமும் 20 ஏழை யாத்திரிகர்களுக்கு இலவசமாக உணவு வழங்கப்படும். அல்லது 'க்யூ' வரிசைகளில் வரும் யாத்திரிகர்களுக்கு 15 லட்டுகள் அல்லது 15 வடைகள் பங்கிட்டு வழங்கப்படும்.

இவ்இலவச பிரஸாத வழங்கீடு, வருடத்தில் ஒரு நாளின்போது—அது உங்கள் பிறந்த நாளிலோ—திருமண 'நாளிலோ—உங்கள் பிள்ளை அல்லது மகளுடைய பிறந்த நாளிலோ—உங்கள் தாய் அல்லது தந்தையாரது நினைவு நாளிலோ—அல்லது உங்களுக்கு ஏதேனும் ஒரு வகையில் பிடித்தமான நாளிலோ—நடைபெறும்.

ஒரு நபர் எத்தனை அறக் கொடைகளாவது வழங்கலாம். ஒவ்வொரு அறக்கொடைக்கான இலவச பிரஸாத வழங்கீடு, நீங்கள் விரும்பும் வெவ்வேறு நாளின் போது நடைபெறும். குறைந்தபட்சம் 10 அறக்கொடைகள் வழங்கினால், அறக்கொடை வழங்கிய நபரைச் சார்ந்த 5 நபர்களுக்கு, இலவசப் பிரஸாத வழங்கீட்டு நாளின்போது, இறைவனின் இலவச தரிசன வசதி ஏற்பாடு செய்யப்படும். (இது தற்போது உள்ள 5 சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட்டுகளின் மதிப்பான ரூ. 125-க்கு சமமாகும்)

ஒவ்வொரு அறக்கொடையாளரின் பெயரும் கோத்ரமும், வழங்கீட்டு நாளின் போது கொலுவில் (இறைவனின் முன் நாள்தோறும் நடைபெறும் சபை) வாசிக்கப்படும்.

நீங்கள் அளிக்கும் இவ்அறக்கொடை தொகைகளுக்கு வருமான வரி விலக்கு உண்டு. நீங்கள் உங்களுடைய வருமான வரி கணக்கின் போது இவ் அறக்கொடையினைச் சுட்டிக்காட்டி வரிவிலக்கு பெறலாம். அறக்கொடையாளர்கள், தொகையினை இந்தியாவிலுள்ள ஆந்திர பேங்க் கிளை அலுவலகங்களின் மூலமாகவோ அல்லது தி. தி. வேதவஸ்தானம், திருப்பதி எனும் முகவரியில் 'எக்ஸிக்யூட்டிவ் ஆபீஸர்' எனும் பெயரில் 'டிமாண்ட் டிராப்ஃட்' ஒன்றினை எந்த வங்கி மூலமாவது வாங்கி 'மேனேஜர், ஆந்திரா பேங்க், தி. தி. தேவஸ்தான நிர்வாகக் கட்டிடம், திருப்பதி, 517501' எனும் முகவரிக்கு கீழ்க்காணும் விவரங்களுடன் அனுப்புதல் வேண்டும்.

1. தொகை அனுப்புவோரின் பெயர், முகவரி.
2. பிரஸாத வழங்கீடு யார் பெயரில் செய்யப்படவேண்டுமோ அவருடைய பெயர், முகவரி.
3. யாருக்கு வருமான வரிவிலக்கு சான்றிதழ் வழங்கப்படவேண்டுமோ அவருடைய பெயர், முகவரி.
4. யாருடைய பெயரில் பிரசாத வழங்கீடு நடைபெற வேண்டுமோ அவருடைய கோத்திரம், குடும்பப் பெயர்.
5. பிரஸாத வழங்கீடுக்குரிய நாள்
6. விநியோகிக்கப்படவேண்டிய வகைகள் விவரம் :
   உணவுப் பொட்டலங்கள்/லட்டு/வடை (ஒரு வகை மட்டுமே குறிப்பிடல் வேண்டும்)
7. வழங்கப்பட்டத் தொகை.

விநியோகிக்கப்பட வேண்டிய நாளுக்கு, குறைந்தபட்சம், 15 நாட்களுக்கு முன்பாகவே தொகை அனுப்பப்படல் வேண்டும்.

(ஒம்.) செயலாட்சித் தலைவர்.
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

தேவாரத்துள் பல அடியார்களின் பெயர்கள் ஆங்காங்கே ஓரிரு தடவைகள் எடுத்தாளப்பட்டுள்ளன. ஆனால் திருநாவுக்கரசர், இலங்கேஸ்வரனாகிய இராவணனை முந்நூறு பதிகங்களில் பாடியிருக்கிறார். திருஞான சம்பந்தர் சுமார் நானூறு இடங்களில் இராவணன் பெருமையினைப் பாடியிருக்கிறார். திரிபுரங்களில் "கொடியவன்" இராவணன் என்று உலக மக்கள் இன்றும் எண்ணி வருகிறார்கள். முருகனிடம் போரிட்டு ஆணவத்தால் அழிந்த சூரபதுமன், சிவபெருமானை மதிக்காது யாகம் செய்து போரிட்டுத் தலையிழந்த தக்கன், மார்கண்டேயனைப் பிடிக்க வந்து சிவபெருமானால் தன்நிலை மையை இவ்வுலகிற்கு எடுத்துக் காட்டியவன்.

இப்படிப்பட்ட இலங்கேஸ்வரன் குரலில் இனிமை கண்டார் தேவார ஆசிரியர் திருநாவுக்கரசர். அவன் கீதத்தைக் கண்ணனுக்கு ஒப்பிட்டுப் பாடுகிறார்.

"தென்னவன் மலையெடுக்கச் சேயிழை
நடுங்கக்கண்டு
மன்னவன் விரலால் ஊன்ற, மணி
முடி நெறிய வாயால்
கன்னலின் கீதம் பாடக் கேட்டவர்
காஞ்சி தன்னுள்
இன்னவற்கருளிச் செய்தார் இலங்கு
மேற்றளியனாரே"

என்று பாடுகிறார்.

பின் மீறு ...டாதாக' என்று அப்பர் சுவாமிகள் பாடும்போது இராவணனின் செய்கைக்கு உமாதேவியாரே அஞ்சினார் என்றால், அவன் வன்மையும் தன்மையும் சாதாரணமானவை என்று எண்ண முடியுமா!

இரக்கமெனும் பொருளிலா அரக்கன் என்றும், துன்மார்க்கத்தில் ஈடுபட்டவன் என்றும் நாம் எண்ணும் எண்ணம் சிறப்புடையதல்ல.

"நகழமால் வரைக்கீழிட்டரக்கர் கோனை நலனழித்து, நன்கருளிச் செய்தான் தன்னை" என்று நாவரசர் திருவாக்கை நண்ணும் போது, இராவணன் ஆண்மை உடையவன் என்பது தெளிவாகிறது. இதற்குச் சான்று—வால்மீகி இராமாயணத்துள் சுந்தர காண்ட பகுதியில் இராவணன் அந்தப்புரம், அரசாட்சி முறை




செந்தமிழ்க்கவிமணி. புலவர்.
த. கு. பதுமநாபன்,
காஞ்சிபுரம் – 1

யும் ஆலோசனை செய்யும் திறனும் நற்குணங்களும் வியக்கத்தக்க முறையில் விளக்கப்பட்டுள்ளன.

அழிந்த யமன், தேவர்களின் சொல் கேட்டு மகேஸ்வரன் மீது மலரம்பு தொடுத்து சாம்பலான மன்மதன் போன்றோர் இவ்வுலகில் குற்றம் செய்தவர்கள்தான். அவர்களையெல்லாம் ஓரிரு பதிகங்களில் குறிப்பிட்டு விட்டு இலங்கை வேந்தன் இராவணனை மட்டும் ஏன் பல பதிகங்களில் பாடவேண்டும்?

இராவணன் பல குற்றங்கள் செய்திருப்பினும் அவற்றில் அவன் கைலையை எடுத்து இருபது கைகளும் சிதைப்புண்டு, பின்னர் அருள் பெற்றதாக உத்திரகாண்டம் நமக்கு அறிவுறுத்துவதால் அப்பர் சுவாமிகளும் திருஞான சம்பந்தரும் எடுத்துக் காட்டுகிறார்கள்.

வாரணம் பொருத மார்பன்! வரையினை எடுத்த தோளன்! நாரத முனிவர்க்கேற்ப நயம்பட உரைத்த நாவன்! தாரணி மௌலி பத்தும் சங்கரன் கொடுத்த வாளும், வீரமும் அழகும் பெற்றவன் யார்? அவன் தான் இலங்கை வேந்தன் இராவணன்! இசையில் வல்லவன்! தன் நாட்டில் பறந்த கொடியில் வீணையைப் பொறித்து இசையின் பெரு

இசையில் வல்லவனாக இருந்த இலங்கை வேந்தன் இராவணன், கல்விக்கடலில் கரை கண்டவன் என்றும், அவன் பெற்ற கல்வியின் கேள்வியும் உலக அனுபவமும் இவ்வுலகில் எவரும் பெறவில்லை என்றும், உடல் வலிவும் தலைநிறைவும் கொண்டவன் என்றும் ஆளுடைப் பிள்ளையார் "கடலென நிறநெடு முடியவன், அடுதிறல் தெறவடி சரணென அடல் நிறை படையருளிய புகழ்" என்று பாடுகிறார்.

"இமையவர் அஞ்சி ஓட எதிர் வாரவர் தம்மை அன்றி, அமைதரு வல்லவரக்கன் அடர்த்து மலை அன்றெடுப்ப" என ஞான சம்பந்தர் பாடுவது போல குபேரனை வென்று புட்பகம் கவர்ந்ததும், இந்திரனை வென்றதும் இவன் திக் விஜயத்தில் பெற்ற வெற்றிகள் என்று பெருமை படுத்துகிறார். இப்படிப்பட்ட வீரனையேவெல்லக்கூடிய வீரர்களான கார்த்த வீரியார்சுனனும், வாலியும் வாழ்ந்தார்கள் என்பது வரலாறு உண்மைகளாகும்.

"பொருதலங்கள் நீண் முடியான் போரரக்கன் புட்பகம்தான் பொருப்

இலங்கை வேந்தன் இராவணனை விரும்பி அன்பு பாராட்டாதவர் இலர். பிறர்மனை நயந்த பெருமையில்லாச் செயல் எண்ணிப் பிரிந்து சென்ற தம்பி வீடணன்கூட என்ன சொல்கிறான்?

"எந்தை நீ தாயும் நீ எம்முன்
நீ, தவம்
வந்தனை தெய்வம் நீ மற்று
முற்றும் நீ"

என்று பாராட்டவில்லையா?

இராவணன் செய்த அரசாட்சி அரக்கர் முறையில் செங்கோல் தானே? அரக்கர் தம் குடிகளுக்கு அளிக்க வேண்டிய சுகத்தை அளிக்காமல் இல்லையே? இப்படிப்பட்ட பெருமை வாய்ந்தவனைத்தான் காழி வேந்தர் "தன்னியல் தசமுகன் என்றும், திருநல்லூர் திருப்பதிகத்தில் "ஏறுபுகழ்பெற்ற தென்னிலங்கையர் கோனை" அருவரையில் சிறியவனுக்கு அருளும் எங்கள் சிவலோகம்" என்றும் பாடுகிறார்.

ஒப்பற்ற புகழும் வலிமையும் கொண்ட இராவணன் ஆட்சிக்குத் தேவலோகமும் உட்பட்டது என்றால் அவன் குடிகளாகிய அரக்கர்களுக் குச் சிற்றுணவாகும் மனிதரை ஒரு பொருளாகப் பாவித்திருப்பானா?

சிறையிருந்த செல்வியாம் சீதைக்கு இன்னல் விளைவித்தான் எனினும், அந்த அவப்பெயரால் கரு ஒளியால் நாம் அவனைக் காண்பதை விட்டு விட்டு இராமயணத்துக்கு முன்னி ருந்த இராவணனைக் காண்போம்.

தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நெடுங்காலமாகவே தீராப் பகை.

இரணியன் மகனை பிரகலாதன் ஆட்சி செய்தபொழுது மாத்திரம் தேவர்கள் முறையிடவில்லையே ஏன்? அரக்கர் வம்சத்தில் உதித்து திறம் பட ஆட்சி செய்த அவன் மீது படை யெடுக்கத் துணியவில்லையே ஏன்! முகந்தனிடம் முறையிட்டால் அது பயனற்றுப் போகும் என்று தெரிந்து தானே முறையிடவில்லை?

இராவணன் பிறன் மனைவிழைந்து சீதையைக் கவராவிடில் மாவலி யைப் போன்று ஒரு சிறந்த அர சனக இருந்திருப்பான். அவனே சிவபக்தனக, இசைச் சக்கரவர்த்தி யாக உலகம் இன்றும் கொண்டாடி யிருக்காதா?

இராவணன் தன் மக்களை உயிரி னும் மேலாகப் பாதுகாத்தான் என்ப தற்குக் கம்பர் எண்ணற்ற சான்று கள் நமக்குத் தருகின்றார். "குரங்கு சுட்டது! எரி சூறையாடிட என் கொடி நகர் கெட்டது! சுற்றமும் நட்பும் படாதபாடு பட்டனர்! இப் படிப்பட்டச் சூழ்நிலையில் இந்த உடல் இந்தச் சிம்மாசனத்தில் அரசன் என்று அமர்ந்திருக்கிறதே!'' என்று தன் உள்ளக்கிடக்கையை வெளிப் படுத்தவில்லையா?

'' சீலத்தான் தென்னிலங்கை
மன்னன் போற்றி!
சிலையெடுக்க வாயலற வைத்தாய்
போற்றி!
கோலத்தாற் குறைவில்லான்
தன்னையன்று
கொடிதாகக் காய்ந்த குழகா
போற்றி! ''

என்று அப்பர் சுவாமிகள் திருத்தாண் டகத்தில் இராவணனைச் சீலமுடைய வன் என்றும், கோலமுடையவன் என்றும் எல்லாச் செல்வமும் இன்ப மும் பெற்ற இலங்கை மாநகரில் யாதொரு குறைவும் இல்லாதிருந் தான் என்றும் சிறப்பித்து பாட வில்லையா?

ஆகவே இராவணன் கொடியவனே என்று எண்ணலாகாது. ஏனெனில்

---

# கண்களும் கழல்களும்

தீந் தமிழ் இலக்கியங்களிலும் பக்திப் பாடல்களிலும் கண்களும் கால்களும் கமல மலர்களாக வர்ணனை செய்யப்படுவதைக் காண்கின்றோம். வைணவர்கள், குறிப்பாகப் பாத வணக்கத்திற்குச் சைவர்களைவிட சிறப்பு முதலிடம் தருகின்றனர். இன்னும் வைணவத் தலங்களில் "பெரிய திருவடி" 'சிறிய திருவடி' என்ற பெயர்கள் கேட்கின்றோம். இதற்கு வைணவ மூர்த்திகள் சிலா உருவங்களிலும், சிரம், உடல், பாதம் என்று பிரித்து அமையாது அருஉருவாகிய இலிங்க உருவில் இருப்பதும் ஒரு காரணமாகலாம். ஆனால் திருவாசகம் போன்ற திருமுறை நூல்களில் 'கழல் அடி' தொழுவதையே சிறப்பாகப் பேசப்படுகிறது. இறைவன் உருவத் திருவடி காண புறக்கண்களும் அகத்தே திருவடி தொழ மனக் கண்களும் வேண்டற் பாலது.

கண்களைக் கருவண்டாக உவமிப்பதும் கருவண்டு தேன் சிந்தும் கமல மலர் நாடி செல்வதும் இயற்கை நியதி. அதுபோலவே இறைவன் இணையடிக் கமலம் நாடி இறையன்பர்கள் கண்கள் செல்லுகின்றன.

" அஞ்சம்பையு ஐயன் தன தலகம்
பையுமளவா
நஞ்சங்களை வெலவாகிய நயனங்களை
உடையான்
துஞ்சம்களி வரிவண்டுகள் குழலின்
படி அழலும்
கஞ்சங்களை மஞ்ஞன் கழல் நகுகின்றது
கண்டாள்.
—கம்பன்.

மன்மதன் ஐந்து அம்புகளையும் இராமன் கூர் அம்புகளையும் அளந்து அவற்றிலும் மேலான நஞ்சையும் வெல்லும் நயனங்களை உடைய பிராட்டி களி வண்டுகள் இசையுடன் சுற்றிவரும் இராமன் பாத தாமரையைக் கண்டாள். பார்ப்பதோ கமலக் கண்களை, பார்க்கப்படுவதோ கமல பாதம். இங்கு சுழலும் வரி வண்டுகள் சீதையின் கருவிழி வண்டுகள். வண்டுகள் மலர் நோக்கிச் செல்வதில் ஆச்சரியம் இல்லையே!

இதனை உணர்ந்தோ என்னவோ மணிவாசகர் தினை அளவு தேன் உள்ள மலரில் போய் தேன்பருக வேண்டாமென்று கோத்தும்பியை அழைத்து நினைக்கும் தோறும், காணடலும், பேசும் தோறும் எப்பொழுதும் அனைத்து எலும்பும் நெக ஆனந்தத் தேன் சொரியும் குனிப்புடையானுக்கே சென்று ஊது என்கிறார். திருக்கோத்தும்பி ஆறுபாடல்களிலும் பாத மலர்க்கே சென்றூது என்று அழைக்கிறார். தும்பியினையே, வண்டையே கருவிழிக்கு உவமையாக ஏற்றி இறைவன் பாதத்தை நோக்கியே அவைகளைப் பறக்க விடுகிறார். கண்கள் கழல்களால் கவரப்படுவன போலவே தோன்றுகின்றன.

" சிந்தனை நின்தனக்கு ஆக்கி நாயி
னேன்தன்
கண்ணினை நின் திருபாதப் போதுக்
காக்கி
சிந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி..."

என்று கூறும்போது,

இங்கும் கண்களை பாத கமலங்களில் சேர்ப்பித்து சிந்தனையாகிய அகக் கண்களையும் அதே பாத கமலங் களிட்டு வழிபடுகின்றார்.

" பொய்யெலாம் விடத்திருவருள் தந்து
தன் பொன் அடியிணைக் காட்டி..."

" துயர்புகா வண்ணம் அருள் செய்து
பொற் கழலிணைக் காட்டி..."

" வீடுதந்து எந்தன் வெந்தொழில்
விட்டிட மென்மலர் கழல் காட்டி..."

" மலரடியிணைக் காட்டி அப்பன் என்னை
வந்து ஆண்டு கொண்டான்"

" விரை மலர் கழல் காட்டி"

இறைவனை நாம் காண வேண்டியதும் அவன் கழல் கால்களையே. அவன் நம் கண்களுக்குக் காட்டுவதும் மலர்ப்பாதமே. இதுவே கண்களுக்கு கழல்களுக்கும் ஓர் இணையற்ற இணைப்பைக் காட்டுகிறது.

இதுபோலவே திருஐயாற்று அப்பர் திருப்பதிகம் பத்துப் பாட்டிலும்

டாக்டர். கே. அழகப்பன் MBBS.,DCH.
*திருச்சிராப்பள்ளி.*

"கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியது கண்டேன்" என்று ஒவ்வொரு செய்யுள் முதல் இரண்டு அடிகளிலும் இறைவன் இறைவியையும் இணைத்து ஒன்றாகக் கண்டு பாடும் அவர் ஈற்று இரண்டு அடிகளில் காண்பது "அவன் பாதம்."

இதுபோல அநேகத் தோத்திரப் பாக்களிலும் பாடுவது பரமனடி, காண்பது இறைவன் அடி, அடைவது அவன் இணையடி நிழல். ஏனையோர் கண்கள் இறைவன் அடி கண்டது. ஆனால் கண்ணப்பர் ஒருவர் கால்கள் தான் இறைவன் கண்களைத் தீண்டியது. இது குறித்துத்தான் கண்ணப்பருக்கு ஒப்ப ஓர் அன்பு உள்ளம் இறைவனால் காண்பது இயலாது எனப்பாடிப் பரவச மெய்தும் மணிவாசகர் தன் அன்பும் அதற்குக் குறைவாகவே எண்ணுகிறார்.

*

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

இவன் குணத்தில் பெரும்பகுதி வியக்கத்தக்கதும் மேன்மையானதும் நாமெல்லாம் நயந்து நெஞ்சில் நிறுத்தத்தக்கதும் ஆன நிகழ்ச்சிகளாகும்.

கல்வியும், செல்வமும், வலிமையும், நற்குணமும் அமைந்தவன் சிறு குற்றம் செய்தால் அச்சிறு குற்றமே மற்றவை அழிய காரணமாகிவிடும். இதைத்தான் இராவண பாத்திரம் கூறுகிறது. இராவணன் குற்றவாளியாக இருந்தாலும் அந்நிலையினை மறந்து மூவர்பாடிய முத்தமிழ்க் களஞ்சியமாம் தேவாரத்துள் கம்பராமாயணக் கருத்துக்கும் இடம தந்து அவன் பெருமைகளை எடுத்துக் காட்டி அப்பண்பு நலன்களின் மேன்மையைக்கூறி, ஒரு சிறு கரும்புள்ளியே மனித வாழ்க்கையின் அடித்தளத்தையே அசைத்து விடுகின்றது என்ற நல்லறிவினை நமக்குப் புகட்டுவதை நாம் உயிருள்ளளவும் மறத்தல் இயலுமோ?

❀

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

कदम्बरुचिमम्बरवसं परममम्बुद कदम्बक-
विडम्बक गलं
चिदम्बुरमणि बुधहृदम्बुजरविं परचिदम्बरनटं
हृदि भज ।

ஸதஞ்சித முதஞ்சித நிகுஞ்சித பதம்
ஜலஜலஞ் சலித மஞ்சு கடகம்
பதஞ்சலி தருகஞ்சனா மநஞ்சன
மஸஞ்சலபதம் ஜனை பஞ்சனகரம்
கதம்பருசி மம்பரவஸம் பரமமம்புத
கதம்பக விடம்பககளம்
சிதம்புதமணிம் புத ஹ்ருதம்புஜரவிம்
பர சிதம்பரநடம் ஹ்ருதி பஜ

இத்தோத்திரத்திற்கு 'சம்பு நடன விருத்தம்' என்றே கூறப்படுகிறது. இத்தோத்திரத்திற்கு காலோ கொம்போ கிடையாது. இவ்வாறு சந்தஸ்ஸினால் செய்யுள்களுக்கு பூரணப்பொலிவு கிடைக்கிறது.

**நிருக்தம் :-** பொருளறிவின்றி சொல்லை வழங்குதல் சிறப்பாகாது என்பதாலும், ஒரு வாக்கியத்தின் பொருள், அச்சொற்களின் பொருளினாலேயே அறியப்படும் ஆதலால் சொற்களின் பொருளை அறிதல் இன்றியமையாதது ஆகும். இதனை உணர்த்துவது நிருக்த்ம் ஆகும். தற்போது வழக்கில் உள்ள நிருக்தம் யாஸ்க மஹரிஷியால் இயற்றப் பட்டது. அதில் 3 காண்டங்களும், 12 அத்தியாயங்களும் உள்ளன. அவை नैघण्टुकम् (நைகண்டுகம்) नैगमम् (நைகமம்) दैवतम् (தைவதம்).

நைகண்டுகத்தில் பத விபாகங்களும் ஒரு பொருள் கொண்ட பல சொற்களைப் பற்றி ஆராய்ச்சியும், நைகமத்தில் பல் பொருள் கொண்ட ஒரு சொல்லின் ஆராய்ச்சியும், தைவதத்தில் தேவதைகளின் விபாகங்களும் அவற்றின் ஆராய்ச்சியும் கூறப்பட்டுள்ளது. பஞ்சபூதங்களே தேவதைகளாக வருணிக்கப்பட்டன என்ற கொள்கை தோன்றுவதற்கு இந்நூல் உதவியிருத்தல் கூடும்.

**ஜ்யோதிஷம் :-** நேத்திராங்கமான ஜோதிவுக்கலை சர்வேச்வரனுடைய பிரதான அங்கமாகும். இப்பூமியில் ஜனித்த மனிதன் முதலிய எல்லா ஜீவராசிகளுடைய நிலை நவக்ரஹங்களைப் போல மாறிக் கொண்டு வருகிறது. கஷ்டம், சுகம், துக்கம், சந்தோஷம், உயர்ந்த பதவி, தாழ்ந்த பதவி என்று எல்லோருடைய நிலையும் மாறி மாறி வந்து கொண்டிருக்கிறது. நாம் ஜ்யோதிஷனிடம் சென்றால் நம் ஸுகதுக்கங்களுக்கு கிரஹகதியாலே என்பார். இவ்வாறு ஜ்யோதிஷம் என்பது இந்நாளில் ஒரு முக்கியம் வாய்ந்த ஸ்தானத்தை அடைந்திருக்கிறது. இதன் மூலம் வேதத்திலேயே இருக்கிறது. வேத மந்திரங்களை எந்த எந்த காலத்தில் வழங்க வேண்டும் என்றும், நாள், அர்த்த மாஸம், மாஸம், ருது, வர்ஷம் இவற்றின் பகுப்பைப்பற்றியும், சூர்ய சந்திரர்களின் நிலையால் நிகழும் அமாவாஸை, பூர்ணிமை இவற்றைப் பற்றியும், அப்போது நிகழும் கிரகணங்களைப் பற்றியும், நக்ஷத்திரங்களைப் பற்றியும் கூறும் நூல் ஜ்யோதிஷம் ஆகும். இவை யஜுர் வேதத்தில் கூறப்பட்டன. மேலும் யார், யார், எந்தெந்த காலத்தில் அக்நியை வளர்க்க வேண்டும் என்று தைத்திரீய ஸம்ஹிதையில் கூறப்பட்டுள்ளது.

वसन्ते ब्राह्मण: अग्नीन् आदधति ग्रीष्मे राजन्य:

வஸந்தே ப்ராஹ்மண: அக்நீன் ஆததி க்ரீஷ்மே ராஜன்ய:

என்று கூறப்படுகிறது.

ஜ்யோதிஷ சாஸ்திரத்தில் முக்கிய நூல் சூர்ய சித்தாந்தம், ஆர்ய பட்டர் இயற்றிய படீயம், வராஹமிஹிரர் இயற்றிய ப்ருஹத் ஸம்ஹிதை முதலியன ஆகும். எனவே இன்றுள்ள ஜ்யோதிஷத்தின் மூலம் வேதத்தில்தான் ஆரம்பமானதுஎனக் காணலாம்.

**கல்பம் :-** வைதிகர்கள் செய்ய வேண்டிய கர்மாக்களை செய்யும் முறைகளை கூறும் நூல்கள் கல்பம் எனப்படும். அவை 3 வகைப்படும். ச்ரௌதாக்கினியில் செய்யப்படுபவை, கிருஹ்யாக்னியிற் செய்யப்படுபவை, பின் பொது தர்மங்கள் அவை,

1. ச்ரௌத ஸூத்ரம்
2. க்ருஹ்ய ஸூத்ரம்
3. தர்மஸூத்ரம்

என்று பிரிக்கப்பட்டன.

இவ்வா வதமும் அதன் ஆறங்கங்களும் நம பண்பாட்டில் மிக முக்கியம் வாய்ந்த ஒன்றாக விளங்குகிறது. மக்களுக்கு தாமாகவே தம் துன்பங்களைப் போக்கிக் கொண்டு பேரின்ப நிலை அடைவதற்கான அறிவு போதாது. இதற்காகவே வேதங்கள் ஏற்பட்டது என்றாலும், அதை ஓதி உணர்ந்து பக்தி செலுத்தி நற்கதி அடைவதற்கு எல்லோராலும் முடிவதில்லை. ஆகவே மக்கள் மேலுள்ள கருணையால் பகவான் தாமே அவதாரங்கள் செய்து 'நல்வழி இது' என்று உணர்த்தினார். அந்த அவதாரங்கள் அவ்வக் காலத்தில் வாழ்ந்தவர்களுக்கு பயன்பட்ட அளவுக்கு பின வந்தவர்களுக்கும் பயன் அளிக்கவில்லை. ஆதலால் இறைவன் மான் காட்டி மான் பிடிப்பது போல மனிதரினமேயாக ஆழ்வார்களையும், நாயன்மார்களையும், ஆசார்யர்களையும் ஆங்காங்கு தோன்றச் செய்து அவர்கள் மூலமாக தர்மத்தை எடுத்துக் சொல்லி அவர்கள் வழியாக வேதத்தை நிலை நிறுத்தினார். இவ்வாறு அப்பெரியோர்கள் சொன்னது எல்லாமே வேதத்தில் உள்ள கருத்துக்களே.

தந்தை செல்வம் சேர்த்து வைத்துப் போனதை மகன் அனுபவிக்கிறான். அதோடு செல்வத்தை மேலும் விருத்தி செய்து அடுத்த தலைமுறையினருக்கு வழங்குகிறான். அது போன்று சிரிய பண்பாடுகளை வேதங்கள் மூலம் நம்முடைய முன்னோர் நம்மிடம் வழங்கிச் சென்றிருக்கிறார்கள். அவற்றைப்பின்பற்றி நாம் நமது வாழ்க்கையை வளர்ப்படுத்திக் கொள்வதோடு, அவ்வேதத்தைப் பேணி, விருத்தி செய்து, நமக்குப் பின் வரும் தலைமுறையினருக்கு வழங்க வேண்டும்.

सर्वोपनिषदो गावो दोग्धा गोपालनन्दन: ।
पार्थो वत्स: सुधीर्भोक्ता दुग्धं गीतामृतं महत् ॥

ஸர்வோபநிஷதோ காவோ தோக்தா
கோபால நந்தன:
பார்த்தோ வத்ஸ: ஸுதீர்போக்தா
துக்தம் கீதாம்ருதம் மஹத்

எல்லா உபநிஷதங்களும் பசுக்கள்; கோபாலன் கறப்பவன்; அர்ஜுனன் கன்று; அருந்துபவர்கள் அறிஞர்கள், கீதையே பால்; என்று பகவத் கீதை த்யான ச்லோகம் கூறுவது போல், நால் வேதங்கள் என்னும் பசுக்கள், சிக்ஷா, வ்யாகரணம், சந்தஸ், ஜ்யோதிஷம், நிருக்தம், கல்பம் என்ற ஆறு அங்கங்களாகிய கன்றுகளுடன் நிறை வாழ்வு வாழ வழி செய்து, அவை தரும் ஞானப்பாலை நாமும் உண்டு மானிடக்குழவிகளான நாம் எல்லா நலமும் பெற்று விளங்குவோமாக!

முற்றும்.

# திருமலை ஒழுகு

த்ஞாத்வா தம் கட மம்பலா
விரஹிதம் கிம்கார்யமஸ்திதி மே
கிந்தே பூர்ணகுரேண ச ப்ராப்ய
ஸலிலம் ஸ்யாதாத்மக: ஸ்ரீதர: |
லீலா ஸ்வல்ய ததா குரேண ப்ரகடயந்
தம் பாணிபத்மாத்ஸ்வகாத்
நீத்வா குத்ரசி துந்நதே கிரிதடே
ச்ருங்கம் பிபேதேஷுணா ||
தஸ்மாத் பாணநிகாதஜான் மம
மதாத் அம்ப:ப்ரவாஹாத்தத:
நீத்வா தீர்த்தவராத் பய: ப்ரதிதிநம்
சாகாசகங்காஹ்வயாத் |
மஹ்யம் தாத மஹாநுபாவ விதரே
த்யுக்த்வா நிஷாதாக்ருதி:
ஸாக்ஷாத்க்ருத்ய நிஜம் வபுர் ஹரிரபி
ஸ்ரீமா நத்ருச்யோऽபவத் ||
பச்சா தார்யவர: ப்ரஹ்ருஷ்டஹ்ருதய:
தீர்த்தாத் தத: பாவநாத்
பூர்ணம் கும்பமமும் விருஷாசலபதே:
ப்ரீத்யை ஹரே ராஹரந் |
ஆகத்யாச்யுததாம தந்திகடத:
ஸ்தாப்யாத தம் பக்தித:
பச்யந் வேங்கடநாதரம்யவதநம்
பத்தாஞ்ஜலி ஸ்தஸ்த்திவாந் ||
தாத ஸ்வாது பய ஸ்த்வதீயமபவம்
பீத்வாऽத்த த்ருப்தோ ப்ருசம்
மத்யே மார்கமஹம் ப்ரஸந்நஹ்ருதய
ஸ்தாபசமேசாந்தித: |
இத்யாபாஷ்ய பரம் வ்ருஷாசலபதி:
ஸ்ரீசைலபூர்ணம் குரும்
நித்யம் ஸாலயதி ச்ரிதப்ரணயதஸ்
தேநார்ப்பிதம் ஜீவநம் ||
ஸ்ரீசைல பூர்ண விஷயஸ்துதி மஷ்ட
காக்யாம்
தத்திவ்யவம்சஜ-ஸுதர்சநதேசிகேந |
பக்த்யா ச யஸ்து படதி
ஸுமநஸ்ஸுபோக்யாம்
ஸ்ரீசைலநாத பதபங்கஜ பக்தி மீயாத் ||
ஜாதம் நபஸ்யே வரமித்ரதாரே
ஸ்ரீசைலபூர்ணார்ய மஹிச்ரயேऽஹம் |
ராமாநுஜார்யாய மஹாத்மநே
ஸ்ரீ ராமாயணார்த்த: கதிதாச்ச யேந ||

ஆதியிலே சேஷாவதாரமான எம்பெருமானாரும் திருமலையேறித் திருவேங்கடமுடையானுக்கு விமான, மண்டப, கோபுரங்கள் முதலான கைங்கர்யங்களையும் கட்டளை பண்ணிப் பின்பு, ஸ்ரீ சித்ரகூடத்தினின்றும் ஸ்ரீகோவிந்தராஜப் பெருமாளையும் ஸ்ரீபுரியிலேறியருளப் பண்ணி, ஸ்ரீபூமிப் பிராட்டியாரையும் வலப்ரதேசமாக ஏறியருளப் பண்ணிப் பின்பு, திருமலையேறித் தமக்குச் சிஷ்யரான அனந்தாழ்வான் கையிலே தம்முடைய திருமேனியை அர்ச்சாவதாரமாக ஏறியருளப் பண்ணி, அத்திருமேனியைத் தாமும் ஆலிங்கனம் செய்தருளிப் பின்பு, தம்முடைய முத்ரைக்கதிகாரியான சிறிய திருவடி முன்பாகத் தமக்கு மடம் நியமித்தருளி, அதற்குப்பின்பு தாமும் தம்முடைய ஆராதனமான சர்ரவர்த்தி திருமகனாரையும் திருமலை நம்பி புருஷகாரமாக மடத்திலே ஏறியருளப்பண்ணுவித்து, பின்பு, திருவேங்கடமுடையானுடைய ஸகலவித கைங்கர்யங்களும், நித்யஸ்ரீயான செல்வமும் என்றும் குறைவராது நடக்கும்படியாகவும், மடத்தில் சக்ரவர்த்தித் திருமகனாருக்குப் பூர்ணோபசாரம் நடக்கும்படியாகவும், திருமலைநம்பியும் தாமுமாக யோசித்தருளி, தம்முடைய அவதாரம் விசாரித்தருளின வளவிலே சகாப்தம் 939 சென்றவர்த்தமான வித்தார்த்தி வருஷம் சித்திரை மாஸத்தில் ஞாயிற்றுக்கிழமை திருவாதிரையில் அவதரித்த திவ்ய தேசங்களெங்கும் ஸகலவித கைங்கர்யங்களும் கட்டளை பண்ணி, பின்பு தமக்குத் திருநக்ஷத்திரம் நாற்பதென்றறிந்து, திருமலையில் மடத்தில் ஸ்வாமியினுடைய செல்வமொன்றும் குறைவராத படியாகத் தம்முடைய திவ்ய ஸிம்ஹாஸனத்தில் தமக்குப் ப்ரத்யாம்நாயமாகச் (பிரதிநிதியாக) சகாப்தம் 979 விகாரி வருஷம் தையீ வெள்ளிக்கிழமை சுக்ல பக்ஷத்தில் அப்பன் சடகோப ஜீயரை(யும்) ஏறியருளப் பண்ணி, அனந்தாழ்வானால் ஸ்ரீவைஷ்ணவர் நால்வர்க்கு ஏகாங்கி சாடியும் கொடுப்பித்து, திருவேங்கடமுடையானையும் தமக்குப் ப்ரத்யாம்நாயரான ஜீயர் கையிலே ஒப்புவித்து, திருமகனாரையும், திருவடி முத்ரை அநந்த கொத்துப்பரி ஜனத்தையும் அவர்கையிலே ஸாதித்தருளிப்பின்பு, எம்பெருமானார் சடகோப ஜீயரை அழைத்து, திருவேங்கமுடையானுடையச் செல்வமும், மடத்தில் திருமகனாருடையச் செல்வமும் குறைவராதபடிக்கு நடப்பிவியும் என்று நியமித்தருளின பின்பு, போய் ஸந்நிதியிலே சென்று ஸேவித்தருளி நிற்க, ஸ்வாமியும் மிகவும் ஸந்துஷ்டராய் அர்ச்சகமுகேந தீர்த்தம், பரிவட்டம், திருமாலை ஸாதித்தருள, திருமலைநம்பி புருஷகாரமாகத் தெற்கு விடான கோயிலுக்கு விடை ஸாதித்தருளப் பின்பு, எம்பெருமானாரும் கண்ணும் கண்ணீருமாய் நம் கைங்கர்யத்துக்கு நம் சடகோபன் (ஜீயர்) விடை கொண்டிருக்கிறுனென்று விண்ணப்பஞ் செய்தருளித் திருமலையிறங்கத் திருமலை நம்பியும் கோவிந்த பட்டரையும் அழைத்துக் கொண்டு இறங்கியருளி எம்பெருமானார் கையிலே தாரை செய்தருளித் திருமலை ஏறப் பின்பு, எம்பெருமானாரும் கோவிந்தபட்டரை அழைத்துக் கொண்டு கோயிலேற எழுந்தருளினார்.

பின்பு சடகோப ஜீயரும் நாற்பதைந்து திருநக்ஷத்ரம் கைங்கர்யம் செய்தருளி ஐயவருஷம் தமக்கு ஆசார்ய கைங்கர்யம் அதிசயமாச்சுது ஆனபடியினாலே, தமக்கு ப்ரதிநிதியாகக் கோயிலை விசாரித்தருளும் படிக்குத் தமக்கு இளவரசாக அழகிய மணவாள ஜீயரையும் நியமித்து ஸிம்ஹாஸனத்தையும்சாதித்தருளித் திருமகனாரையும் காட்டி, பாஷ்யகாரர் முத்ரையும் கொடுத்த பின்பு, தமக்கிளவரசான அழகிய மணவாள

ஜீயரும் தாமுமாய் இருவரும் அந்யோந்ய(மாக)ம் ஸ்வாமி ஸந்நிதியிலே கைங்கர்யம் பண்ணிக்கொண்டிருக்கிற ஸமயத்திலே,

கங்கைகொண்ட சோழபுரத்துக்குப் ப்ரபுவாய், தேசாதிபதியான கோனேரி ராஜாவும் அவன் ப்ராதாவான ஸதாசிவ மஹாராஜாவும் ஸகுடும்பமாகத் திருமலையேறித் திருவேங்கடமுடையானையும் ஸேவித்து, எம்பெருமானாருடைய கட்டளை ப்ரபாவத்தைக் கண்டும், கேட்டும், அர்ச்சாவதாரமாக எழுந்தருளியிருக்கும் எம்பெருமானார் திவ்யமங்கள விக்ரஹத்தையும் ஸேவித்து, மிகவும் ஆநந்தபரிதராய், எம்பெருமானார் தம்முடைய திவ்ய ஸிம்ஹாஸனத்திலே நியமித்தருளினவரான சடகோப ஜீயரையும், அவருடைய இளவரசான அழகிய மணவாள ஜீயரையும் ஸேவித்து, கோயிலிலே எம்பெருமானார் கட்டளைப்படிக்கு இருவரும் அந்யோந்யமாக இருந்து செய்யும் கைங்கர்ய ப்ரகாரத்தையுங் கண்டு, திருவடிகளில் அத்யந்தம் ப்ரவணர்களாய் ஜீயர் ஸந்நிதியில் மடமேறி இருவரும் வந்து, மடத்துக்குக் குலதனமான சக்ரவர்த்தி திருமகனாரையும், அழகிய மணவாள ஜீயருக்குச் சாதித்தருளின திருவேங்கடமுடையானையும் ஸேவித்து, ஜீயர்களிடத்திலே ப்ரவணர்களாய் மிகவும் ஆதாரத்துடன் கத்கத புளகாங்கித தேஹர்களாய், (தழுதழுத்த குரலுடன் மயிர் சிலிர்க்கும்) ராஜாக்களான இருவரும் ஸகுடும்பமாக ஸமாச்ரயணம் ஸாதித்தருள வேணுமென்று ப்ரார்த்திக்க, அப்போது சடகோப ராமாநுஜ ஜீயரும் தமக்கிளவரசான அழகிய மணவாள ஜீயரைப் பார்த்து, ராஜாக்கள் இருவருக்கும் ஸகுடும்பமாக ஸமாச்ரயணம் சாதித்தருளுமென்று நியமிக்க, அழகிய மணவாள ஜீயரும் ஆசார்ய நியமனத்தாலே மங்கள திவஸத்திலே சகாப்தம்....வருஷம் சுக்லபக்ஷ த்வாதசி ச்ரவணத்திலே ஸ்ரீ சக்ரவர்த்தி திருமகனார் ஸாதித்த பாவனையுடன் ராஜாவுக்கு ஸபரிவாரத்துடன் திருவிலச்சினை(யும்) சாதித்தருள, அக்காலத்திலே ராஜாவும் திருமகனாருக்கு அநேகமாகக் கனகாபிஷேகம்பண்ணி, திருவாபரணங்களும் ஸமர்ப்பித்து, திருமகனாருக்கு வீரவனம் என்கிற கிராமத்தையும், ஸ்ரீ அழகிய மணவாள ஜீயருக்கு ஆசார்யாபிமானத்துடன், கௌதமலிங்கேச்வரம் ஸமீபத்திலே தனக்கு ப்ராதாவான ஸதாசிவ மகராஜன் கையிலேயிருந்த (வசத்திலிருந்த) அரசு வேலம் என்கிற கண்டிகையையும், (நிலப் பிரிவையும்) பின்பு மடத்திலே திருமகனாருக்கும், திருவேங்கடமுடையானுக்கும் அகண்டார்த்தமாக ஒரு கால்வாயும், திருப்பதியில் தம்முடைய ஆராதனத்துக்கு ஒரு தோட்டமும் ஸமர்ப்பித்துப் பின்பு, இராஜாக்கள் இருவரும் கோபுரத்திருமதிள் கைங்கர்யங்களும் செய்து வாஹனங்களும் பண்ணி வைத்து, உத்ஸவங்களையும் கூடவிருந்து நடத்துவித்துச் சோழதேசத்திலே ராமாநுஜபுரம் என்கிற கிராமத்தையும் சமர்ப்பித்து மடத்திற்கு வேண்டிய ஸாமக்ரிகளையும் ஸேகரித்து வைத்துச் சில காலம் ப்ரபுத்வம் பண்ணிப் போக,

பின்பு, ஜீயரும் சிஷ்யருமாக அரண்யத்தைச் சேதித்துக் கிராமமாக்கி ஜீயர்பாளயம் என்று திருநாமம் சாத்திப் பின்பு, ப்ரதம லிங்கேச்வரம் ஸமீபத்தில் அழகிய மணவாள ஜீயருக்காக ஸமர்ப்பித்த அரசுவேலமென்னும் கிராமத்தையும் கடாக்ஷித்து அதனைக் கட்டி அழகியபாளயம் என்று திருநாமம் சாத்தித் திருமலை ஏறித் திருவேங்கமுடையானுக்குச் சிலகாலம் கைங்கர்யங்களையும் செய்து தமக்கு அந்திமதசை வந்தபடியிலே அழகிய மணவாள ஜீயரைத் தம்முடைய திவ்ய ஸிம்ஹாஸனத்திலே நியமித்துத் தாமும் ஜய ஸம்வத்ஸரம் சித்திரை மாஸம் தீர்த்தம் ஸாதித்தருளினார். (திருநாட்டுக் கெழுந்தருளினார்)

பின்பு, அழகிய மணவாள ஜீயரும், ஜய வருஷம் கார்த்திகை மாஸத்தில் இளவரசு ஸிம்ஹாஸனத்தில் திருவேங்கட ராமாநுஜ ஜீயரை நியமித்தருளி, எம்பெருமானார் திருவாராதனமான சக்ரவர்த்தி திருமகனாரையும் காட்டிக் கொடுத்து, ராமாநுஜ முத்திரையையும் ஸாதித்தருளித் திருவேங்கடமுடையான் கைங்கர்யங்களைச் செய்யும் படிக்கு நாலு ஏகாங்கிகளுக்குக் காவியும் கொடுப்பித்து, தாம் கோவிலுக்கு எழுந்தருளி யாளி வாஹனத்தையும் செய்தருளி, ஸ்ரீ கோஷ்டியை நிர்வஹித்துப் பின்பு, திருமாலை(க்கு) எழுந்தருளி வேங்கடத்தரியையும் பரிஜேறியையும் ஸேவித்துத் திருவேங்கடமுடையான் ஸந்நிதியிலே கைங்கர்யங்களையும் செய்தருளிப்பின்பு, தீர்த்தம் ப்ரஸாதிக்கிற ஸமயத்திலே, தம்முடைய இளவரசான திருவேங்கட ராமாநுஜ ஜீயரைச்சகாப்தம் 1066ம் சித்திரை மாஸம் ச்ரவண நக்ஷத்திரத்திலே தம்முடைய திவ்ய ஸிம்ஹாஸனத்திலே நியமித்துத் தீர்த்தம் ப்ரஸாதித்தருளினார்.

பின்பு, திருவேங்கட ராமாநுஜ ஜீயரும் தமக்கு அந்திமதசை வந்தபடியினாலே, தமக் கிளவரசான எம்பெருமானார் ஜீயரையும் சகாப்தம் (......) வருஷத்திலே புரட்டாசி மாதத்திலே நியமித்து ஹநுமந் முத்திரையும் கொடுத்துத் தாமும் திருவேங்கடமுடையானுக்குக் கைங்கர்யம் செய்தருளி 1106-ம் வருஷம் வைகாசி மாஸத்திலே சுக்லபக்ஷ தசமியில் தீர்த்தம் ப்ரஸாதித்தருளினார்.

பின்பு, எம்பெருமானார் ஜீயரும், தமக்கிளவரசாக அப்பன் சடகோப ஜீயரை நியமித்தருளி, ராமாநுஜ முத்ரையையும் ஸாதித்தருளித் திருமகனாரையும் காட்டித் தாமும் திவ்ய தேசயாத்ரை செய்தருளி ஸ்ரீபெரும்பூதூரிலே எம்பெருமானார்க்குத் திருப்பல்லக்கும் தோளுக்கினியானும் ஸ்வர்ணமண்டபமும் செய்தருளிப் பின்பு, திருவேங்கடமுடையானுக்கு 50-வருஷம் கைங்கர்யம் செய்தருளி, சகாப்தம் 1156-ம் வருஷம் தமக்கு அந்திமதசை வந்தபடியாலே தமக் கிளவரசான அப்பன் சடகோப ஜீயரையும் தம்முடைய திவ்ய ஸிம்ஹாஸனத்திலே நியமித்து, ஜய வருஷம் கார்த்திகை மாதம் த்விதியையில் தீர்த்தம் ப்ரஸாதித்தருளினார்.

பின்பு, அப்பன் சடகோப ஜீயரும் தம்முடைய இளவரசாகக் கார்த்திகை மாஸம் பூரட்டாதியில் பராங்குச ஜீயரை நியமித்தருளி எழுந்தருளியிருந்து வாழ்வித்தருளினார்.

முற்றும்,

# ராசி பலன்

(1-7-81 முதல் 31-7-81 வரை)

Dr. டி. அர்க்கசோமயாஜி, M.A., Phd.
திருப்பதி.

## மேஷம்

(அசுவனி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)

8-ம் தேதி வரை அலுவலகக் கவலை கள், கருத்து வேறுபாடுகள், வீண் செலவினங்கள். 16-ம் தேதிக்குப் பிறகு நண்பர்கள், உறவினர்கள் வருகை, மாதம் முழுவதும் பெரி யோர்களது பாராட்டுதல்களுக்குள் ளாதல். உற்றூர் உறவினருடன் அல்லது தன் மக்களிடமிருந்து பிரிவு. பண வரவு மற்றும் வெற்றி இருப் பினும் அவ்வளவாக மன அமைதி யிராது. 16-ம் தேதிக்குப் பிறகு சிறிது உடல்நலம் கெடல். மொத்தத் தில் எந்த விதமான குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகள் ஏதுமின்றி இம்மாதம் விளங்கும்.

## விருஷபம்

(கிருத்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சிரிஷம் 2-ம் பாதம் முடிய)

8-ம் தேதிக்குப் பிறகு அலுவலகக் கவலைகள், கருத்து வேறுபாடுகள், பண வரவு, வெற்றி, புதிய ஆடை ஆபரணங்கள். ஆனால் தன் மக்கள் காரணமாக சிறிது மனக் கவலைக் குள்ளாதல். 16-ம் தேதிக்குப் பிறகு வீட்டில் திருடு போதல் அல்லது பொருள்களை இழத்தல்.

## மிதுனம்

(மிருக சிரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய)

8-ம் தேதி வரை பண நஷ்டம் அல்லது அதிக வீண் செலவினங்கள். நல்ல நண்பர்கள், உறவினர் மூலமாக துன்பங்களுக்குள்ளாதல். 16-ம் தேதிக்குப் பிறகு கருத்து வேறுபாடு கள், உற்றூர் உறவினருடன் பிரிவு, பிரயாணம் அல்லது கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட தொந்தரவு களினால் அவதியுறல் அல்லது மற்ற வர்களால் ஏமாற்றப்படல்.

## கடகம்

(புனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய)

கேளிக்கைகளில் ஈடுபடல், பெரி யோர்களது பாராட்டுதல்களுக்குள் ளாதல், புதிய ஆடை ஆபரணங்கள். 20-ம் தேதிக்குப் பிறகு பிரயாணம், மனைவிக்கு மன மகிழ்ச்சியின்மை அல்லது கண் அல்லது வயிறு சம்பந் தப்பட்ட நோயினால் அவதியுறல். தீய எண்ணங்கொண்டோர் துன்பங் களுக்குள்ளாக்க முயற்சித்தல், அவ் வப்போது மனஅமைதியை கெடுத் தல். 8-ம் தேதிக்கு முன்னரும், 20ம் தேதிக்குப் பிறகும் உள்ள நாட்கள் நல்ல நாட்களாகும்.

## சிம்மம்

(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

மகிழ்ச்சி, கேளிக்கைகளில் ஈடு படல், பண வரவு, வெற்றி ஆனால் அதிக செலவுகள். 16-ம் தேதி வரை நாட்கள் நன்றாக அமையும். சிறிய கருத்து வேறுபாடுகள், அவ்வப் போது பிரயாணங்கள்.

## கன்னி

(உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ் தம், சித்திரை 2-ம் பாதம் முடிய)

இகழ்ச்சிக்குள்ளாதல் அல்லது பண நஷ்டம், பிள்ளைகளிடம் கருத்து வேறுபாடுகள் கொளல் அல்லது பிரயாணம் மற்றும் உடல் சோர்வுக் குள்ளாதல். எனினும் நல்ல நண்பர் கள், புதிய ஆடை ஆபரணங்கள் கிடைக்கப் பெறல், 8-ம் தேதிக்குப் பிறகு நாட்கள் நல்லனவாகவும், 16-ம் தேதிக்குப் பிறகு நன்மை தரும் நாட்களாகவும் அமையும். எனினும் மனஅமைதிக்கான சூழ்நிலை அவ்வளவாக அமையாது.

## துலா

(சித்திரை 3-ம் பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய)

பண நஷ்டம் அல்லது இகழ்ச்சிக் குள்ளாதல், பிரயாணம் மற்றும் உடல் சோர்வு. 9-ம் தேதிக்கு முன் னர் கருத்து வேறுபாடுகளுக்குள் ளாதல். பின்னர் நல்ல நண்பர்கள், நல்ல பண நிலைமை, எனினும் மன அமைதி அவ்வளவாக அமையாது. 8-ம் தேதிக்கு முன்னர் உடலில் காயம் ஏற்படல். இறைவழிபாடும், ருத்ராபிஷேகமும் மனஅமைதியைத் தரவல்லன.

## விருச்சிகம்

(விசாகம் 4-ம் பாதம் முதல், அனு ஷம், கேட்டை முடிய)

கேளிக்கைகளில் ஈடுபடல், பண வரவு, 8-ம் தேதிக்கு முன்னர் தன் மனைவியுடன் கருத்து வேறுபாடு களுக்குள்ளாதல் அல்லது கண் அல் லது வயிறு சம்பந்தப்பட்ட தொந் தரவுகளினால்அவதியுறல், சத்காரியங் களில் ஈடுபடுதற்குரிய சூழ்நிலை ஏற் படல், புதிய ஆடை ஆபரணங்கள். 8-ம் தேதிக்குப் பிறகு உடலில் காயம் ஏற்படல். மொத்தத்தில் இவ் ராசிக் காரர்களுக்கு இம்மாதம் நன்றாகவே அமையும்.

## தனுசு

(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய)

16-ம் தேதிக்கு முன்னர் பிர யாணம் மேற்கொளல், வயிறு சம்பந்

தப்பட்ட நோயினுல் அவதியுறல். பின்னர் மனைவிக்கு மகிழ்ச்சியின்மை அல்லது கண் சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல், பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள், கேளிக்கைகளில் ஈடுபடல். சரிசமமான வரவு செலவுகள். 8-ம் தேதிக்கு முன்னர் விளங்கும் நாட்கள் வெகு நன்ருக அமையும்.

### மகரம்

(உத்திராடம் 2-ம் பாதம் முதல் திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய)

பண வரவு, வெற்றி, நீய காரியங்களில் ஈடுபடல். 16-ம் தேதிக்கு முன்னர் பெண்கள் மூலமாக துன்பங்களுக்குள்ளாதல். பின்னர் பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள், 8-ம் தேதிக்கு முன்னர் பிள்ளைகள் அல்லது புதல்வியர் காரணமாகக் கவலைக்குள்ளாதல். மொத்தத்தில் இம்மாதம் நன்ருகவே விளங்கும்.

### கும்பம்

(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதையம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய)

சிறிது உடல்நலம் கெடல், வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல். 8-ம் தேதிக்குப் பிறகு தன் மக்கள் காரணமாகவோ, தீய எண்ணங்கொண்டோராலோ கவலைகளுக்குள்ளாதல். 19-ம் தேதிக்குப் பின்னர் பெண்கள் மூலமாக துன்பத்திற்குள்ளாதல். அவ்வப்போது பிரயாணம் மற்றும் உடல் சோர்வு அல்லது உற்ருர் உறவினரிடமிருந்து பிரிவு, 19-ம் தேதிக்கு முன்னர் மதிப்புக் குறைதல், 16-ம் தேதிக்குப் பிறகு நாட்கள் நன்ருக அமையும்.

### மீனம்

(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

அவ்வப்போது பிரயாணம், கேளிக்கைகளில் ஈடுபடல், 8-ம் தேதிக்கு முன்னர் பிள்ளைகள் அல்லது தீய வழிகளின் மூலம் பண வரவு. பிறகு உடல் நலம் கெடல், மற்றும் கூடாநட்பு. 19-ம் தேதிக்கு முன்னர் உறவினர் வருகை, பெரியோர்களது பாராட்டுதல்களுக்குள்ளாதல். மொத்தத்தில் குடும்பத்தில்மகிழ்ச்சி.



# என் வாழ்க்கையில் ......

ஒரு சமயம் நாங்கள் எங்கள் குடும்பத்துடன் திருப்பதிக்கு வந்து இருந்தோம். கால் நடையாக மலையேறி, இறங்கி வருவதாக வேண்டிக்கொண்டிருந்தோம். அதன்படி செய்து, திருப்தியுடன் பெருமாளை சேவித்துவிட்டு இறங்கி நடந்து வந்துகொண்டிருந்தோம். அந்த நாட்களில் மலையில் இவ்வளவு பாதுகாப்பு வசதி கிடையாது. திருடர் பயம் உண்டு என்றும் கூறுவார்கள். அப்போது நான் சிறுமி ஆதலால், என் மாமா வெங்கடாசலபதி பகவானைப் பற்றியும், அவருடைய மகிமைகளைப் பற்றியும் சொல்லிக் கொண்டே வந்தார். நானும் பக்தி பரவசத்துடன் கேட்டுக் கொண்டு வந்தேன். கூட்டம் கூட்டமாக சுவாமி தரிசனம் பண்ணி விட்டு வந்தர்கள் கோவிந்தா! கோவிந்தா!! என்று பக்தி கோஷத்துடன் சொல்வது கேட்டு நாங்கள் அவர்களில் ஒருவராக மலையிலிருந்து இறங்கி நடந்து கொண்டிருந்தோம். முழங்கால் முடிச்சு அருகில் சிறிது தூரத்தில் எங்களுடன் வந்தவர்களை விட்டுப் பிரிந்து விட்டோம். பாதை தவறி விட்டோம் என்பது மட்டும் நன்கு புரிந்தது. எங்களுக்கு முன்னுலும் பின்னுலும், ஆள் நடமாட்டத்தையே காண முடியவில்லை. நேரமோ இருட்டிக் கொண்டு வந்தது. எங்களுக்கு ஒரு வழியும் தெரியவில்லை. அங்கிருந்தவர்களில் முக்கால் வாசிப்பேர் பெண்கள். ஆதலால், பயந்து 'ஓ' வென அழவே தொடங்கி விட்டனர். என் மாமா தான், "கலங்காதீர்கள், ஸ்ரீனிவாசனை நம்பி வந்து இருக்கிருேம். அவன் கை விட மாட்டான்" என்று கூறினுர்.

அதே சமயம், "கோவிந்தா, வெங்கடரமணு, ஏடு கொண்டல வாடா" என்று கூட்டத்துடன் செல்பவர்களின் குரல் கேட்டது. குரல் மட்டும்தான் கேட்டதே தவிர ஆள் அரவமே தெரியவில்லை. ஒரு நிமிடம் திகைத்தோம். பின் அந்த குரலைப் பின்பற்றி நாங்கள் செல்ல ஆரம்பித்தோம். வழியும் தெரிந்தது. மக்களும் வந்து கொண்டிருந்தனர். அவர்களிடம், 'உங்கள் கோஷத்தைக் கேட்டுத்தான் நாங்கள் வந்து கொண்டிருக்கிருேம்' என்று கூறினேும். அதற்கு அவர்கள், 'இப்போதைக்கு நாங்கள் ஒருவர் கூட கோஷம் போடவில்லையே. நடந்த களைப்பால் நாங்கள் இளைப்பாறிக் கொண்டிருந்தோம்' என்ருர்கள். இதைக் கேட்ட எங்களுக்கு எப்படி இருக்கும்? அப்படியே அனைவரும் மெய் சிலிர்த்து உட்கார்ந்து விட்டோம். பக்தர்களின் துன்பம் கண்டு ஓடி வந்து துயர் துடைக்கும் வள்ளல் அவன். இன்னும் அந்த சம்பவத்தை நினைக்கும் போது என் கண்ணில் நீர் திரை யிடுகிறது. அந்த மதுரமான குரல் என் காதில் ஒலித்துக் கொண்டேதான் இருக்கிறது.

கே. ஆர். ரங்கநாயகி
விருதுநகர்.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

| உத்ஸவ கட்டணங்கள் | | ஸேவைகள் | |
|---|---|---|---|
| வஸந்தோத்ஸவம் | ரூ. 2500/- | அமந்த்ரணோத்ஸவம் | ரூ. 200/- |
| பிரம்மோத்ஸவம் | ரூ. 750/- | பூராபிஷேகம் | ரூ. 500/- |
| கல்யாணோத்ஸவம் | ரூ. 1500/- | ஸகஸ்ரகலஸாபிஷேகம் | ரூ. 2500/- |
| ஊஞ்சல் சேவை | ரூ. 1000/- | திருப்பாவாடை | ரூ. 5000/- |
| தெப்போத்ஸவம் | ரூ. 1500/- | கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ரூ. 1745/- |
| | | ஸகஸ்ர தீபாலங்கார சேவை | ரூ. 2000/- |

நித்ய சேவைகள் (ஆண்டொன்றுக்கு)

| | | | |
|---|---|---|---|
| நித்ய கற்பூர ஹாரத்தி | ரூ. 150/- | நிரந்தர கற்பூர ஹாரத்தி | ரூ. 3000/- |
| நித்ய நவநீத ஹாரத்தி | ரூ. 400/- | நிரந்தர நவநீத ஹாரத்தி | ரூ. 8000/- |
| நித்ய அர்ச்சனை | ரூ. 200/- | நிரந்தர நித்ய அர்ச்சனை | ரூ. 4000/- |

மேற்படி ஆர்ஜித ஸேவைகளுக்குரிய குறிப்பிட்டத்தொகைக்கான D. D. ஒன்றினை 'The Executive Officer, T. T. D. Tirupati' எனும் பெயரில், எந்த வங்கி மூலமாகவாவது பெற்று, அதனை தேவையான தகவல்களுடன் (ஆங்கிலத்தில்) The Peishkar, T. T. D. Tirumala எனும் முகவரிக்கு 15 நாட்களுக்கு முன்கூட்டியே அனுப்புதல் வேண்டும்.

# தங்கு வசதி விவரங்கள்

திருமலையிலும், திருப்பதியிலும் தி. தி. தேவஸ்தானத்தாரின் இலவச தங்கு வசதிகள் தவிர்த்து, குறைந்த வாடகை கட்டணங்களில் குறைந்தபட்ச வசதிகளுடன் கூடியது முதல் குளிர்ச்சாதன வசதிகளுடன் கூடிய காட்டேஜுகளில் யாத்திரிகர்கள் தங்கலாம்.

குறிப்பிட்ட தொகையினை ஒரு வாரத்திற்கு முன்கூட்டியே செலுத்தினால், திருமலையில் அல்லது திருப்பதியில் தங்கு வசதிக்கான ஒதுக்கீடு அளிக்கப்படும். தேவையான தங்குவசதியின் சரியான விவரத்தையும், சரியான முகவரியையும் தங்கள் மனுவில் குறிப்பிட்டு அதனுடன் தொகைக்கான டிமாண்ட் டிராஃப்ட் அல்லது மணியார்டர் ரசீதனை இணைத்தல் வேண்டும். குறிப்பிட்ட தங்குவசதி அளிக்க முடியாதிருப்பின், வேறு தங்கு வசதி அளிக்கப்படும். தொகை பெற்றுக்கொண்ட உடனேயே, ஒதுக்கீடு அட்டை அனுப்பப்படும். தங்கு வசதிக்காகத் திருமலைக்கு வருபவர்கள், இவ் ஒதுக்கீடு அட்டையினை குறிப்பிட்ட விசாரணை அலுவலகத்தில் காட்டல் வேண்டும். இவ் அட்டையினையோ அல்லது மணியாடர் ரசீதனையோ அல்லது தொகையினைப் பெற்றுக்கொண்டதற்கான ரசீதனையோ காண்பிக்காவிட்டால். அவர்களுக்கு தங்குவசதி அளிக்கமுடியாது. ஒரு நாள் என்பது காலை 8 மணி முதல் அடுத்த நாள் காலை 8 மணி வரை என்பதாகும். டிமாண்ட் டிராஃபட் அல்லது தொகை பெற்றுக் கொண்டதற்கான ரசீது அல்லது மணியார்டர் ரசீதுடன் கூடிய விண்ணப்பங்கள் யாவும் Reception Officer, T. T. Devasthanams, Tirumala அல்லது Tirupati எனும் முகவரிக்கே அனுப்பப்படல் வேண்டும். டிமாண்ட் டிராஃப்ட் அல்லது மணியாடர் குறிப்பிட்ட Reception Officer எனும் பெயரில்தான் எடுத்தல் அல்லது அனுப்பப்படல் வேண்டும். செக்குகள் (Cheques) ஏற்றுக்கொள்ளப்படமாட்டா.

# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில், திருமலை

## தினசரி பூஜைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

**சனி, ஞாயிறு, திங்கள் மற்றும் செவ்வாய்க் கிழமைகளில்:**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன
3-45 முதல் 4-30 வரை ; தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலுக்குள் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை,(தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் மதியம் 12-00 வரை : **ஸர்வதரிசனம்**
மதியம் : 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, 2வது அர்ச்சனை, ஏகாந்தம், 2வது மணி.
1-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**
1-00 முதல் 7-00 வரை: சர்க்கார் மற்றும் ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜித பிரம்மோற் சவங்கள், வாகனசேவைகள், ஊஞ்சல்சேவை முதலியன (சர்க்கார் மற்றும் ஆர்ஜித தெப் போற்சவங்கள் செவ்வாய்க்கிழமைகளில் மட்டுமே,
இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், (ஏகாந்தம்) இரவு மணி
8-00 முதல் 12-00 (நடு இரவு) **ஸர்வதரிசனம்**
12-00 முதல் 12-30 வரை : சுத்தி,ஏகாந்த சேவைக் கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்த சேவை (தனி)

**புதன் கிழமைகளில் (ஸகஸ்ர கலஸாபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன.
3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை, (தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலஸாபி ஷேகத்திற்கான ஏற்பாடுகள்.
6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) 2வது மணி.
8-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்.**
மதியம் : 1-00 முதல் மாலை 6-00 வரை: சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன
இரவு : 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன
8-00 முதல் நடுஇரவு 12-00 வரை **ஸர்வதரிசனம்.**
12-00 முதல் 12-30 வரை : சுத்தி,ஏகாந்தசேவைக் கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)

**வியாழக் கிழமைகளில் (ஆர்ஜித திருப்பாவாடை, பூலங்கி சேவை ஆகியவை நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன
3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வ்ரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை (ஸகஸ்ரநாம அர்ச்சனை (தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் 8-00 வரை : சாலிம்பு, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடை அலங்காரம், மணி முதலியன.
8-00 முதல் மாலை 6-00 வரை : **ஸர்வதரிசனம்**
மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை : சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவம், ஆர்ஜித பிரம் மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன.
மாலை 6-00 முதல் இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், பூலங்கி சமர்ப்பணை, இரவுமணி முதலியன.
இரவு 8-00 முதல் 12-00 வரை : **பூலங்கி ஸர்வதரிசனம்**
12-00 முதல் 12-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக் கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)

**வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)
3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, நித்ய கட்டளை கைங்கர்யங்கள், காலை முதல் மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.
5-00 முதல் 7-00 வரை : அபிஷேகம் (தனி)
7-00 முதல் 8-30 வரை : சமர்ப்பணை முதலியன
8-30 முதல் 9-30 வரை : தோமால சேவை அர்ச்சனை (தனி)
9-30 முதல் 10-00 வரை : 2வது மணி, பலி, சாத்துமுறை முதலியன
10-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**
மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை : சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவம், ஆர்ஜித பிரம் மோற்சவங்கள், வாகனசேவைகள், சர்க்கார் மற்றும் ஆர்ஜித ஊஞ்சல் சேவை முதலியன,
இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள் இரவு மணி முதலியன.
8-00 முதல் இரவு 12-00 வரை **ஸர்வதரிசனம்**
12-00 முதல் 12-30 வரை ; சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)



दधिमथननिनादैस्त्यक्तनिद्रः प्रभाते
निभृतपदमगारं वल्लवीनां प्रविष्टः ।
मुखकमलसमीरैराशु निर्वाप्य दीपान्
कवलितनवनीतः पातु गोपालबालः ॥

*ததிமதநநிநாதைஸ்த்யக்தநித்ர꞉ ப்ரபாதே*
*நிப்ருதபதமகாரம் வல்லவீநாம் ப்ரவிஷ்ட꞉*
*முககமலஸமீரை ராசு நிர்வாப்ய தீபாந்*
*கபளிதநவநீத꞉ பாது கோபால்பால꞉ ||*

தயிர்க் கடையும் சப்தத்தால் விடியற்காலையில் கண் விழித்தெழுந்து, சந்தடி செய்யாமல் ஆயர் மங்கைகளின் இல்லம் புகுந்து அங்கு அவர்களால் ஏற்றி வைக்கப்பட்டிருக்கும் விளக்குகளை தன் தாமரை போன்ற முகத்தின் மூச்சுக்காற்றினால் கடுக அணைத்துவிட்டு வெண்ணெயை விழுங்கும் கோவலர் சிறுவனான கண்ணன் நம்மைக் காப்பானாக.

*(கிருஷ்ண கர்ணாம்ருதம் - லீலாசுகர்)*